PARLE

# என்றும் மறவோம்... வாழ்நாள் வரை

## வாழ்க்கைப் பாதை இதுவே சரி

வாழ்க்கைப் பாதையில் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் ஒரு சோதனையே. எந்தப் பாதையில் செல்வது, எதைத் தவிர்ப்பது: நம்மை வேறுபடுத்தும் அடையாளம் இதுவன்றோ. ஒருவித சுயநலமின்றி எதிர்பார்ப்பின்றி, பிறருக்கு உதவுதல்; பாதையில் செல்கையில், மற்றவர்களின் துயர் நீக்குதல். உண்மையான வாழ்க்கை என்பது இதுதானே. என்றும் மறவோம்... வாழ்நாள் வரை. வாழ்க்கைப் பாதை இதுவே சரி. வருடக்கணக்காக இந்தியாவின் அனைத்திலும் அதிகமாக விற்பனையாகும் பிஸ்கட்




• சுவை மிகுந்தது, உண்மையான சக்தி நிறைந்தது •

everest/95/PPL/110tm

# இன்று சந்தியுங்கள் உங்கள் கிரிக்கெட் ஹீரோவை!



World Cup-96 Achievers Collection

# FREE

**Cricketer Card With Every Pack**







ரூ. 13.50 மட்டும்




- சுவையானது
- சிக்கனமானது
- எளிதில் தயாரிக்கக் கூடியது



கிரிக்கெட் விளையாடும் குழந்தைகளே!

நீங்கள் விரும்பும் ரஸ்னா ஸ்பிரெட் மேக்கர் பேக்கைத் திறந்ததும் பரவசம் ஆரம்பமாகிறது. உங்கள் அம்மா இந்த சுவைமிக்க ஸ்பிரெட் மேக்கரால் உங்களுக்காக தயாரிக்கப்போகும் சுவையான பண்டங்களைப் பற்றி நாங்கள் பேசவில்லை. நீங்கள் விரும்பும் ஒவ்வொரு ரஸ்னா ஸ்பிரெட் மேக்கரிலும் ஒரு மனங்கவரும் கிரிக்கெட் வீரர் கார்டு உங்களுக்கென உள்ளது. அதுவும் **இலவசம்!**

இப்போது சுவைமிக்க ரஸ்னா ஸ்பிரெட் மேக்கரை ஸான்ட்விச், சப்பாத்தி அல்லது பூரியுடன் சுவைத்து மகிழ இன்னொரு காரணம்.

**இச்சலுகை இல்லாமலும் பேக்குகள் கிடைக்கின்றன.**

Mudra EAMR 9610 Tam




# அம்புலிமாமா

நிறுவனர்: **'சக்கரபாணி'** நிர்வாக ஆசிரியர்: **நாகிரெட்டி**

## கல்வி நிலையங்களில் அரசியல்

குழந்தைகளும் பெற்றோர்களும் 1996ம் ஆண்டை நன்கு நினைவில் வைத்திருப்பார்கள். ஏனெனில் நம் நாட்டின் உயர் நீதி மன்றங்களில் ஒன்று தன் தீர்ப்பில் கல்வி நிலையங்களிலிருந்து அரசியல் அறவே ஒதுக்கப்பட வேண்டும் என்று கூறியுள்ளது. அரசியல் கட்சிகள் கல்வி நிலையங்களில் தம் கட்சி வேலைகளைச் செய்து கல்விக்கு இடையூறு விளைவிக்கக் கூடாதென அத்தீர்ப்பில் தெளிவாகக் கூறியுள்ளது.

தற்போது கல்வி நிலையங்களில் மாணவர் சங்கத் தேர்தல்களில் அரசியல் கட்சிகள் தலையிட்டுத் தம் 'ஆட்களை' நிறுத்தி விடுகின்றன. தேர்தலில் சுவரொட்டிகள் அறிக்கைகள் என அச்சிடப்பட்டு செலவு செய்யப்படுகிறது. வெற்றி விழாக்கள் கொண்டாடப்படுகின்றன. வன்முறைகள் நடக்கின்றன.

கல்வி நிலைய நிர்வாகத்தினர் இவற்றைக் கண்டும் எதுவும் செய்ய முடியாத நிலையில் இருக்கிறார்கள். இதனால் மாணவர்களுக்குப் படிக்க நேரமே இருப்பதில்லை. மாணவர்கள் முதலில் கல்வி பயின்று பிறகே தலைமைப் பொறுப்பிற்கான பயிற்சியைத் தம் சங்கங்கள் வாயிலாகப் பெறவேண்டும். கல்வியை புறக்கணித்து விட்டு இத்தகைய தேர்தல் வேலைகளில் ஈடுபடக் கூடாது. எனவே பெற்றோரும் மற்றோரும் மாணவர்கள் கல்வி பெறுவதற்கான சூழ்நிலையைத்தான் உருவாக்கித்தர வேண்டும். இது அவர்களின் கடமை.

**அனைவருக்கும் எமது புத்தாண்டு வாழ்த்துக்கள்!**

**மதி முகம்: 100** **ஜனவரி 1997** **புன்னகை: 1**

**தனிப்பிரதி: ரூ.6.00** **வருட சந்தா: ரூ.72.00**



# போலியோ இல்லாத இந்தியா!

இலட்சியத்தை நெருங்குகிறோம்

இன்னும் அடுத்த அடியை எடுத்து வைப்போம்.

**தேசிய போலியோ நோய் தடுப்பு தினங்கள்:**

## டிசம்பர் 7, 1996
## ஜனவரி 18, 1997




தாய்மார்களே!



நீங்கள் ஏற்னெவே உங்கள் குழந்தைக்கு சொட்டு மருந்து போட்டிருந்தாலும், போன வருடம் தேசிய போலியோ நோய் தடுப்பு தினங்களில் சொட்டு மருந்து போட்டிருந்தாலும், தற்போது குழந்தைக்கு சுகவீனம் அல்லது வயிற்றுப் போக்கு போன்ற வியாதிகள் கண்டு உடல் நலம் பாதிக்கப்பட்டிருந்தாலும் பாதுகாப்பு நலன் கருதி மீண்டும் ஒரு முறை உங்கள் அருகில் உள்ள போலியோ சொட்டு மருந்து முகாம்களில் டிசம்பர் 7, மறுபடியும் ஜனவரி 18 தேதிகளில் ஐந்து வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு கூடுதல் சொட்டு மருந்து தவறாமல் போடுங்கள்.



ஆரோக்கியமான
குழந்தைகளின் எதிர்காலம்
நம் நாட்டின் எதிர் காலம்.



POLIOPLUS

## கி.பி. 2000 – த்தில் போலியோ இல்லாத இந்தியாவை உருவாக்குவதில் பங்கேற்போம்.



# அனைவருக்கும் உணவு

கடந்த நவம்பரில் இத்தாலியின் தலைநகரான ரோமில் உலகின் 190 நாடுகள் ஐந்து நாட்கள் மாநாடு ஒன்றை நடத்தின. இது உலக உணவு மாநாடு இதில் நாற்பது நாடுகளின் அரசாங்கத் தலைவர்களும் மற்றும் நாற்பது நாடுகளின் பிரதமர்களும் கலந்து கொண்டனர். இவர்கள் போக வந்தவர்கள் அந்தந்த நாட்டு பிரதிநிதிகளாவர்.

உலகிலிருந்து பசியைப்போக்கிவிடுவது என்ற கருத்தில் எல்லோரும் இம்மாநாட்டில் ஒருமித்தே இருந்தார்கள். ஆனால் அதை எப்போது செய்து முடிப்பது என்பதில் அவர்கள் மாறுபட்ட கருத்துக்களை வெளியிட்டார்கள். கி.பி. 2000-ல் உலகில் யாரையுமே பட்டினியாக இருக்கவிடக் கூடாது என நம் பிரதமர் தேவகௌடா தம் கருத்தைக் கூறினார். அதாவது இன்னும் மூன்றே ஆண்டுகளில் உலகில் யாருமே பட்டினியால் வாடாமல் செய்து விட வேண்டும்.

பட்டினியிளின்று விடுதலை பெற வேண்டுமென்பது எல்லோருடைய உரிமை என்று ரோம் மாநாடு உறுதிபடுத்தியது. தற்போது உலகில் 84 கோடி மக்கள் பட்டினியால் வாடுகிறார்கள் என்றும் இன்னும் இருபது ஆண்டுகளில் இந்த எண்ணிக்கையைப் பாதியாகக் குறைக்க வேண்டும் என்றும் அந்த மாநாடு தீர்மானித்தது. இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன்பும் இது போன்ற ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டும். அது செயலாக்கப் படவில்லை. பட்டினிச் சாவுகள் ஏற்பட்டு வருவதை நாம் பார்த்துக் கொண்டுதானிருக்கிறோம். ஒரு வேளை இப்போதைய தீர்மானப்படி 42 கோடி மக்களைப்பட்டினி கிடக்க விடாமல் இருபது ஆண்டுகளில் செய்துவிட்டாலும் மற்ற 42 கோடி மக்களுக்கு விடிவுகாலம் எப்போது என்ற கேள்விக்குப் பதில் கிடைக்கவில்லையே!

உணவுத்தட்டுப்பாடு ஏன் ஏற்படுகிறது?

அதற்கு பல காரணங்களைக் கூறலாம் நம்தேவைக்கு ஏற்ப உணவு தானியம் விளையாதது ஒன்று. இரண்டாவது விளைந்த உணவு தானியம் யாவருக்கும் சரியாகக் கிடைக்காமல் போகிறது. மக்கள் தொகை பெருகுவதை இன்னும் ஒரு காரணமாகவும் கூறலாம்.

நம் நாட்டில் அரசாங்கமே உணவு தானியங்களை நியாயவிலைக்கு தானிய கடைகளின் வாயிலாக மக்களுக்கு கிடைக்கச் செய்கிறது. இது பொருளாதாரத்தில் பின்னடைந்தவர்களுக்காகச் செய்யப்பட்ட ஏற்பாடு இந்தப் பங்கீடு கூடச் சரியாக இல்லை எனப் புகார்கள் எழும்பியுள்ளன.




உணவுப் பண்டங்களை வீணாக்குவது கூட உணவுத் தட்டுப் பாட்டிற்கு ஒரு காரணம். நன்றாக விளைச்சலைக் கண்ட நாடுகள் தம் நாட்டு உணவு தானியங்களுக்கு அதிக விலை கிடைக்க வேண்டுமென்ற வியாபார நோக்கில் தம்மிடமுள்ள உபரிதானியங்களைக் கடலில் கொட்டியும் உள்ளன.

ரோமில் செய்த பிரகடனம் ஒரு அறிக்கை தானே பொழிய எந்த நாட்டையும் கட்டுப்படுத்தும் உத்தரவல்ல. அதனால் எந்த நாட்டையும் நிர்பந்தப்படுத்த முடியாது. அதனால் உலகில் பட்டினியை அறவே ஒழிக்க வேண்டுமென்றால் அரசாங்கங்களோடு மக்களும் ஒத்துழைக்க வேண்டும். நாம் இவ்வாறு உறுதி பூணுவோம். எல்லோருக்கும் உணவு கிடைக்க செய்வோம். நாம் உணவுப் பொருள்களை வீணாக்க மாட்டோம். உணவுக் பொருள்கள் வைத்திருப்பவர்கள் அவை இல்லாதவர்களுக்கு நம்மால் முடிந்த வரை கொடுத்து உதவுவோம். பட்டினியைப் போக்குவோம் என உறுதி கொண்டு அதை எந்தநாளும் காப்போம்.



# புதையல் பூதம்

முனிசாமி குடிகாரன். தன் சிறு நிலத்தையும் வீட்டையும் விற்றுப் பணத்தைக் குடித்தே தீர்த்தான். வைத்தியம் செய்து கொள்ள முடியாமல் அவனது மனைவி இறந்து போனாள். அவன் தன் மகன் மாணிக்கத்தைப் படிக்க வைக்காமல் அவ்வூர் மிராசுதாரர் மோகனரங்கத்திற்கு அடிமையாக விற்றான். மிராசுதாரரும் தனக்கு வேலை செய்ய ஒருவன் கிடைத்தான் என்றும் அவனுக்கு சம்பளம் எதுவும் கொடுக்க வேண்டாம் என்று மகிழ்ந்து முனிசாமிக்குக் குடிக்க அவ்வப்போது பணம் கொடுத்து வந்தார்.

ஒரு நாள் முனிசாமி இறந்து போனான். மாணிக்கம் தன் தந்தைக்கான ஈமச் சடங்குகளைச் செய்து முடித்துவிட்டு மிராசுதாரரிடம் போய் ''ஐயா! இங்கே இருந்தால் என் தாய் தந்தையாரின் நினைவே வரும். நான் கண்காணாத ஊருக்குப் போய்ப் பிழைத்துக் கொள்கிறேன்'' என்றான்.

மிராசுதாரரோ ''நீ சொல்வது சரிதான். ஆனால் உன் தகப்பன் உன்னை எனக்கு அடிமையாக விற்றுப் பணம் வாங்கி வாங்கிக் குடித்தானே. அந்தப் பணத்தை எப்படி நீ கொடுப்பாய்? ஒன்று நீ என் வீட்டு வேலைகளைச் செய்து இரண்டுவேளை இங்கேயே சாப்பிட்டுக் கொண்டு இருந்து விடு. அல்லது நான் சொல்லும் மூன்று வேலைகளைச் செய்து என் அடிமைத் தளையிலிருந்து விடுபட்டு நீ எங்கு வேண்டுமானாலும் போ'' என்றார்.

மாணிக்கமும் ''அந்த மூன்று வேலைகளும் என்னவோ?'' என்று கேட்டான். மிராசுதாரரும் ''இந்த ஊர் எல்லையில் எனக்கு ஒரு ஏகர் பொட்டல் நிலம் உள்ளது. அதில் இதுவரை எதுவுமே விளைந்ததில்லை அதை உழுது பயிரிட்டு விளைச்சலைக் காட்டு. இது முதல் வேலை. இதைச் செய்த பின் அடுத்த வேலையைக் கூறு

—பாபநாசம் சாமா—

கிறேன்'' என்றார். வேறு வழியில்லா மல் அதைச் செய்வதாக மாணிக்கம் கூறி விட்டுச் சென்றான்.

அவன் சில நாட்கள் வெட்டி மண்ணைச்சமமாகப் பரப்பலானான். அப்படிச் செய்யும் போது ஒரு நாள் அவனது கடப்பாரை ஏதோ ஒன்றின் மீது பட்டு 'டங்'கென்ற ஒலியைக் கிளப்பியது. அவன் இந்த இடத்தை ஆழமாக தோண்டவே அங்கு அவனுக்கு ஒரு செப்புக் குடம் தென்பட்டது. அவன் அதை எடுத்து அதன் மூடியைத் திறந்தான். அப்போது அதிலிருந்து குபுகுபு வென்று புகை வெளிப்பட்டது.

மாணிக்கம் அதைப் பார்த்துத் திகைத்து நிற்கையில் அந்தப் புகை ஒரு பூதமாக மாறி ''உனக்கு என்ன வேண்டுமோ கேள். அதைக் கொடுக்கிறேன்'' என்றது. மாணிக்கம் சற்றுத் துணிவு கொண்டு ''நீ யார்? நான் கேட்பதை நீ கொடுப்பதால் உனக்கு என்ன பயன்?'' என்று கேட்டான். பூதமும் ''நான் இந்த செப்புக்குட பூதம். இந்தக் குடம் அற்புத சக்தி வாய்ந்தது. அச்சக்தி கொண்டு நல்லவர்களுக்கு உதவ வேண்டியது என் கடமை'' என்றது.

மாணிக்கமும் ''நான் நல்லவன் தானா என்று நீ அறிந்து கொண்டாயா?'' என்று கேட்கவே அப்பூதம் ''ஓ! நல்லவன் யாராவது இந்தக் குடத்தைத் தொட்டதும் குடத்திலுள்ள நான் அதை உணர்ந்து விடுவேன்'' என்றது. அப்போது மாணிக்கம் ''நீ எப்படி இந்தக் குடத்திற்குள் சென்றாய்?'' என்று கேட்டான். அதுவோ ''அந்தக் கதை எல்லாம் உனக்கு எதற்கு? நான் செய்யும் உதவியைப் பெற்றுக் கொண்டு சுகமாக வாழப் பார்'' என்றது.

மாணிக்கமும் ''சரி. நான் சொல்வதைக் கேள். நான் ஒரு அடிமை. நான் விடுதலை பெறப் படாத பாடு பட்டுக்கொண்டிருக்கிறேன். நீயோ இக் குடத்தின் அடிமை என்கிறாய். ஒரு





அடிமையால் வேறொரு அடிமையின் கஷ்டத்தை தீர்க்க முடியுமா?'' என்று கேட்டான். அது கேட்டு அப்பூதமும் ''நீ உண்மையிலேயே மிகவும் நல்ல வன். என்னைப் பற்றிக் கூறுகிறேன்.'' என்று தன்னைப் பற்றிச் சொல்லலா யிற்று.

ஒரு காலத்தில் பலபுரத்தில் பல சேனன் என்ற வணிகன் இருந்தான். அவன் பெரிய போக்கிரி, சுயநலக் காரன். தன் சகோதரர்களின் சொத்துக் களை ஏமாற்றிப் பிடுங்கிக் கொண்டு அவர்களை ஊரைவிட்டுத்துரத்தி விட் டான். அவனது ஆருயிர் நண்பனான கிருஷ்ணனையே ஏமாற்றி அவனைக் கட்டிய வேட்டியுடன் ஊரை விட்டுத் துரத்தி விட்டான்.

கிருஷ்ணன் காட்டிற்குப்போய் தவம் செய்து அரிய சக்திகளைப் பெற் றுக் கொண்டு திரும்பி வந்தான். அவன் பலசேனனைக் கண்டு ''நீ பல கொடிய பாவச்செயல்களைப் புரிந்தி ருக்கிறாய். நீ நற்கதி பெற உன் செல் வத்தை எல்லாம் ஏழைகளுக்கு தானம் செய்துவிடு'' என்றான். பலசேனனும் அவ்வாறே செய்வதாகக் கூறினான்.

ஆனால் அவன் ஏழைகளென்று தன் அடியாட்களைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு தானம் கொடுப்பதை அவர்கள் திருப்பி அவனுக்கே கொடுத்து விடவேண்டுமென்று ஒரு ஏற்பாடு செய்து கொண்டான்.

கிருஷ்ணன் பலசேனனின் முன் ஒரு செப்புக் குடத்தை வைத்து ''இதற்கு அற்புத சக்திகள் உள்ளன. நல்ல மனதுடன் நீ இதைத் தொட்டால் உன் பாவங்கள் உன்னை விட்டு வில கிப் போகும் அதன் பின் நாம் இரு வரும் காட்டிற்குப் போய் தவம் செய்து முக்தி பெறலாம்'' என்றான். பலசேனன் செப்புக் குடத்தின் சக்தி களைக் கிருஷ்ணனிடம் கேட்டுத் தெரிந்து கொண்டு'' நான் காட்டிற்கு வர மாட்டேன். எனக்கு இந்தக் குடத் தைக் கொடுத்து விட்டு நீ போய் விடு'' என்றான்.

கிருஷ்ணன் அதற்குச் சம்மதிக்க வில்லை. பலசேனனோ அந்தக் குடத்தை தன் பலம் முழுவதும் கொண்டு இழுத்து எடுக்க முயன்றான். ஆனால் மறுவினாடியே அவன் ஒரு பூதமாக ஆகி அக்குடத்துள் சென்று விட்டான். கிருஷ்ணன் பெருமூச்சு விட்டு ''நீ என் நண்பன் என்றுதானே உனக்கு உதவ வந்தேன். இன்னமும் நீ முக்தி அடையும் பக்குவம் பெற வில்லை. இப்போதைக்கு உன்னை

பூமிக்குள் புதைத்து வைக்கிறேன். உனக்கு நல்லறிவு வந்ததும் உன்னை ஒரு நல்லவன் காண்பான். அப் போது உன் பாவங்கள் முற்றிலும் விலகிட நீயும் முக்தியை அடைவாய்'' என்றான்.

பூமிக்குள் புதைபட்ட பலசேனன் பல வருடங்கள் காத்துப் பார்த்தான். அவனது கெட்ட குணங்கள் மறைந் தன. பிறருக்கு உதவ வேண்டும் என்ற எண்ணமே அவன் மனதில் உயர்ந்து நின்றது.

இவ்வாறு பூதம் சொல்லி நிறுத்திய தும் மாணிக்கம் ''அப்படியானால் நீ பலசேனனா? சரி. என்னைப் பற்றி தெரிந்து கொள்'' என்று தன்னை பற்றி முழு விவரங்களையும் கூறினான். பூதமும் ''அரிய சக்திகளை அடைந்த எனக்கு எந்த வேலையும் கடின மில்லை. இந்த நிலத்தை நொடியில் பண்படுத்தி விடுகிறேன் பார்'' என்று கூறி ஏதோ ஒரு மந்திரத்தை உச்சரித் தது. மறு நிமிடமே அது விளைநில மாக மாறி பச்சைப் பசேலென பயி ருடன் விளங்கியது.

மாணிக்கம் அப்போது ''இனி நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்கவே பூதமும் ''என்னை பற்றி எதுவும் அந்த மிராசுதாரரிடம் சொல் லாதே. நீ உன் எஜமானனிடம் போய் அவன் சொல்ல வேண்டிய மற்ற இரண்டு வேலைகள் என்ன என்று கேட்டுக்கொண்டு வா'' என்றது.

மாணிக்கமும் போய் மிராசுதார ரைக் கண்டு பொட்டல் நிலத்தை உழுது பண்படுத்தி பயிர் விளைவித் திருப்பதாகக் கூறினான். அது கேட்டு மிராசுதாரர் ஆச்சரியப்பட்டார். அவர் அந்த அதிசயத்தைக் காண உடனே மாணிக்கத்துடன் கிளம்பிச் சென்றார். மிராசுதாரருடன் அவரது மகள் மாலா வும் வந்தாள். இருவரும் தளதள வெனப் பயிர் இருப்பதைப் பார்த்து மலைத்து நின்றனர்.





அப்போது மாணிக்கம் ''நான் செய்ய வேண்டிய இரண்டாவது வேலை என்ன?'' என்று கேட்டான். மிராசுதாரரும் ''நீ சாதாரணப்பட்டவனல்ல. உன்னிடம் ஏதோ ஒரு அற்புத சக்தி உள்ளது. சரி, என் அங்கவஸ்திரத்தை எடுத்து விரிக்கிறேன். அது நிறைய பணம் வரச் செய்'' என்றார். மாணிக்கம் செப்புக் குடத்தின் மூடியை தொடப்போகவே அதற்குள் மேலிருந்து காசு மழை பெய்து அங்கவஸ்திரத்தை நிரப்பி விட்டது.

மிராசுதாரர் பேச்சு மூச்சற்று நிற்கவே மாணிக்கம் ''நீங்கள் உங்கள் இரண்டாவது வேலையைக் கூறினீர்கள். அதைச் செய்து விட்டேன். இனி நீங்கள் கூறப் போகும் மூன்றாவது வேலை என்ன?'' என்று கேட்டான். மிராசுதாரர் ஏதோ கூறப் போகையில் சட்டென மாலா மாணிக்கத்தைப் பார்த்து ''நீ என்னை மணந்துகொள்'' என்றாள். மாணிக்கமும் ''இதற்கு நான் தயார். ஆனால் இதற்கு முன் நான் விடுதலை பெற வேண்டும்'' எனக் கூறி மிராசுதாரரைப் பார்த்தான்.

அவரோ ''நீ இப்படியெல்லாம் செப்பிடு வித்தை காட்டிவிட்டால் என் மாப்பிள்ளையாகி விட முடியுமா? நான் கூறும் மூன்றாவது வேலையைச் செய்துமுடி. பிறகு யோசிக்கலாம்'' என்றார். மாணிக்கமும் ''அது என்ன? கூறுங்கள்.'' எனவே அவரும் ''எனக்கு வாழ்நாள் முழுவதும் வேலை செய்ய அடிமைத் தேவை. அப்படி ஒரு அடிமையைக் கொண்டு வந்து விட்டு விட்டால் உனக்கு விடுதலை அளிக்கிறேன்'' என்றார்.

மாணிக்கம்சற்று யோசித்து ''ஐயா, உங்களுக்கு அதாவது உயிருள்ள உங்கள் உடலுக்கு பணிபுரிய ஒரு அடிமை தேவை, அவ்வளவுதானே?'' எனவே மிராசுதாரரும் ''ஆமாம்'' என்று'அழுத்தம் திருத்தமாகக் கூறினார். அப்போது மாணிக்கம் ''அப்படிச் செய்து விட்டால் நீங்கள் எனக்கு விடுதலை அளித்து உங்கள் மகள் மாலாவை எனக்கு மணம் செய்து வைக்க வேண்டும். இதற்குச் சம்மதமா?'' என்று கேட்டான். மிராசுதாரரும் ''சரி'' எனவே மாலாவும் வெட்கப்பட்டு தலை குனிந்து கொண்டாள்.

மாணிக்கம் ''இங்கேயே இருங்கள். ஒரு நொடியில் உங்களுக்கு ஒரு அடிமையை அழைத்து வந்து விடுகிறேன்'' என்றான். மிராசுதாரரும் அங்கேயே உட்கார்ந்து கொண்டு

அங்கவஸ்திரத்தில் மலைபோல் வந்து விழுந்த காசுகளை எண்ணலானார். மாணிக்கம் செப்புக் குடத்து பூதத்திடம் போய் நடந்ததைக் கூறி ''இந்த மிராசுதாரர் கொடியவர். இவரும் உன்னைப் போல மாற வேண்டும். அதனால் மிராசுதாரரின் ஆவி இந்தக் குடத்திற்குள் போய் விட வேண்டும். நீ மிராசுதாரரின் உடலில் புகுந்து நல்ல மனிதனாக வாழ வேண்டும். நாம் இருவரும் இதனால் ஒரே சமயத்தில் அடிமைத் தளையிலிருந்து விடுதலை பெற்று விடுவோம்'' என்றான்.

மறு நிமிடமே பூதம் அவ்வாறே செய்து மிராசுதாரர் போல உருவெடுத்து வந்தது. மாணிக்கம் அவனிடம் ''ஐயா, உயிருள்ள இந்த மிராசுதாரருக்கு அடிமையாக இருக்க இந்த செப்புக்குட பூதம் பணிபுரியும். இப்போது மிராசுதாரர் கூறிய மூன்றாவது வேலையையும் செய்து விட்டேன்'' என்றான்.

செப்புக்குட பூதத்தால் அக்குடத்துள் செலுத்தப்பட்ட மிராசுதாரரின் ஆவி குடத்திலிருந்து வெளியே வர முடியாமல் திணறியது. மிராசுதாரரின் உருவிலிருந்த பலசேனன் குடத்திலிருந்த மிராசுதாரரின் ஆவிக்கு நடந்ததை எல்லாம் கூறி ''நீயே உனக்குக் குழி தோண்டிக் கொண்டாய், நீ எனக்கு அடிமையாக இருக்க வேண்டியதில்லை. எனவே செப்புக் குடத் தோடு உன்னை பூமிக்குள் புதைத்து வைக்கிறேன். நீயும் இதனுள் நெடுங்காலம் இருந்த பின் நல்லவனாக மாறு. அப்போது நீயும் என்னைப் போல விடுதலை பெறலாம்'' எனக் கூறி அக்குடத்தை பூமிக்குள் புதைத்தான்.

அதன் பின் அவன், மாலா, மாணிக்கம் ஆகிய மூவரும் வீட்டிற்கு வந்தனர். மாணிக்கத்திற்கும் மாலாவிற்கும் திருமணம் நடைபெற்றது. சில மாதங்களுக்குப் பின் மிராசுதாரரின் உடலி லிருந்த உயிரின் ஆயுள் முடிவுறவே அவன் இறந்து போனான்.

மாணிக்கமும் மாலாவும் வெகு காலம் வாழ்ந்து பிறருக்கு நன்மைகளையே செய்து வந்தனர், பூமிக்குள் புதைந்து கிடந்த செப்புக் குடமும் அதனுள்ளிருந்த மிராசுதாரரின் ஆவியும் கேட்பாரற்றே இருந்தன.



# உலோபிக்கு இரட்டிப்பு செலவு!

அந்த ஊரில் காளியண்ணன் பணக்கார விவசாயி. அவன் மகாக் கஞ்சன். ஒரு முறை அவனது தானியக் கிடங்கிற்குள் ஒரு நல்ல பாம்பு புகுந்து விட்டது. அதனால் அக்கிடங்கினுள் செல்ல எல்லோருமே பயப்பட்டார்கள். வேலையாட்கள் போக பயப்படுவது கண்டு வேறு வழி இல்லாமல் காளியண்ணன் பாம்பாட்டி பாப்பண்ணனை அழைத்து வரச் சொன்னான்.

பாப்பண்ணன் வந்ததும் காளியண்ணன் ''என் கிடங்கிலுள்ள பாம்பை பிடித்துக்கொண்டு போய் எங்கேயாவது விட்டுவிடு. உனக்கு பணம் தருகிறேன்'' என்றான். பாப்பண்ணனும் மகுடியை ஊதவே தானியக்கிடங்குள் போன பாம்பு வெளியே வந்தது. பாப்பண்ணன் அதனைப் பிடித்துத் தன் பிடாரத்துள் போட்டு மூடிவிட்டு காளியண்ணனிடம் பணம் கேட்டான். அவன் ஒரு ரூபாயை எடுத்துப் பாப்பண்ணனிடம் நீட்டினான்.

பாப்பண்ணனோ 'நான் ஒரு பாம்பைப் பிடிக்க வாங்குவது பத்து ரூபாய். அதைக் கொடுங்கள்' என்றான். காளியண்ணனோ 'முடியாது. இஷ்டமிருந்தால் இதை வாங்கிக் கொள். இல்லாவிட்டால் பேசாமல் போ!'' என்றான் அலட்சியமாக.

அப்போது பாப்பண்ணன் ''அப்படியா'' என்று கூறித் தன் பிடாரத்தை திறந்து தான் பிடித்த பாம்பைத் தூக்கி தானியக்கிடங்கிற்குள் எறிந்தான். இதைக் கண்ட காளியண்ணன் திகைத்து ''பாப்பண்ணா! பாம்பைப் பிடித்துக்கொண்டு போய் விடு. பத்து ரூபாய் கொடுத்து விடுகிறேன்' என்றான் அழாத குறையாக.

பாப்பண்ணனோ ''இது நான் இரண்டாவது முறையாகப் பாம்பு பிடிப்பது. ஆகையால் இருபது ரூபாய் கொடுக்க வேண்டும்'' எனக்கண்டிப்பாகக் கூறவே வேறு வழி இல்லாமல் காளியண்ணன் இருபது ரூபாய் கொடுத்து பாம்பைப் பிடித்துப் போகச் சொல்ல வேண்டியதா யிற்று!






# 18

(ரூபதரனும் அவன் மகனும் தன் வீட்டில் கூடி கொட்டமடித்து வந்த கயவர்களைக் கொன்றார்கள். இதற்காக ரூபதரன் தன் பலத்தை மட்டும் நம்பியிராமல் தன் அறிவையும் பயன்படுத்தினான். அன்று அவனுக்கு தேவதைகளும் உதவியாக இருந்தனர். அப்படியும் ரூபதரனின் பிரச்சினைகள் முழுவதுமாகத் தீர்ந்து விட வில்லை. அவற்றைச் சமாளித்தாக வேண்டும். அதன் பிறகு-)

இந்த சம்பவங்களெல்லாம் நடந்து கொண்டிருந்தபோது பத்மமுகி தூங்கிக் கொண்டிருந்தாள். பகுகீர்த்தி அவளது படுக்கையறைக்குப் போய் ''அம்மா! இன்னமும் ஏன் தூங்க வேண்டும்? எழுந்திருங்கள். இங்கிருந்த கயவர்களெல்லாம் செத்து ஒழிந்தார்கள். உங்களுக்கு நல்லகாலம் வந்து விட்டது'' என்று கூறி அவளை எழுப்பினாள்.

அதை முதலில் பத்மமுகி நம்பவில்லை. அவள் சந்தேகப்பட்டவாறே ''விதி விளையாடுவதே வேடிக்கையாக இருக்கிறது. அவர்களை எல்லாம் கொன்றவர் யார்?'' என்று எழுந்தாள். அவள் கிழவியோடு கீழே இறங்கி வந்து ரூபதரனுக்கு எதிரே இருந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டாள். அவள் எதுவும் பேசாமல் கற்சிலை போல இருப்பது கண்டு ரூபதரன் ஆச்சரியப்பட்டான்.

அப்போது தீரமதி ''அம்மா! ஏன் இப்படிக் கற்சிலை போல் உட்கார்ந்திருக்கிறாய்? வாய் திறந்து எதுவும்



பேச மாட்டாயா?'' என்று தாயிடம் கேட்டான். அவளும் ''மகனே! பேசவா சொல்கிறாய்? இதுவரை நடந்தவற்றால் என் மனம் கல்லாகி விட்டது. இவர் உண்மையிலேயே உன் தந்தை தானா? இவர் என் கணவரானால் எனக்கும் என் கணவருக்கும் மட்டும் தெரியும் பல ரகசியங்களை அறிவாரா?'' என்று கேட்டாள்.

ரூபதரனும் தீரமதியிடம் ''உன் தாயார் கேட்பது சரியே. என் கந்தலான ஆடைகளைக் கண்டு நான் யாரோ என்று அவள் எண்ணிவிட்டாள். நாம் ஒரிருவரைக் கொல்லவில்லை. இதகாவின் அரச குமாரர்களைக் கொன்றிருக்கிறோம். இதை எண்ணிப் பார். அதனால் இந்த நாட்டிலிருந்து நாம் இப்போதே வெளியேறி விடவேண்டும்'' என்றான்.

தீரமதியும் ''அப்படியானால் இப்போது நாம் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்கவே ரூபதரனும் ''நாம் முதலில் நன்றாகக் குளிக்க வேண்டும். பின்னர் இசைக்கருவிகளால் பலத்த இசை ஒலிக்கச் செய்ய வேண்டும். வெளியே உள்ளவர்களுக்கு இங்கு ஏதோ சுபகாரியம் நடக்கிறது என்ற எண்ணம் ஏற்படும்படிச் செய்ய வேண்டும். இந்த அரச குமாரர்கள் இறந்த விஷயம் யாருக்கும் தெரியக்கூடாது. இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு இங்கிருந்து யாருக்கும் தெரியாமல் வெளியேறிக் காட்டிற்குள் சென்றுவிட வேண்டும்.'' என்றான்.

ரூபதரன் கூறியபடி எல்லோரும் குளித்தனர். வாத்திய இசை முழங்கியது. வெளியே தெருவில் போய் கொண்டிருந்தவர்கள் அந்த வீட்டில் திருமணம் நடக்கிறது என்று எண்ணிக் கொண்டார்கள். ரூபதரன் குளித்து விட்டு வந்த போது முற்றிலும் புதிய மனிதனாக எல்லோருக்கும் தென்பட்டான். அவன் தன் மனைவியிடம் ''இருபது வருடங்கள் கழித்து வந்த என்னை நீ இப்படியா வரவேற்பது?'' என்று கூறிவிட்டு கிழ வேலையாளிடம்'' எனக்குக் கட்டிலில் விரிப்பு போடு. நான் படுத்து சற்று இளைப்பாறுகிறேன்'' என்றான்.

உடனே பத்மமுகி ''பகுகீர்த்தீ! அவரது கட்டிலை இங்கே இழுத்து வந்து அதில் கம்பிளியையும் தோலையும் விரி'' எனக் கூறினாள். அதைக் கேட்ட ரூபதரன் கோபத்தோடு ''என் கட்டிலை இழுத்து வருவதா? யார் அதை அடி மரத்திலிருந்து எடுத்து

வேறாக்கியது? என்று கேட்டான்.

அக்கட்டில் அந்த வீடு கட்டப்பட்ட போது அங்கு முளைத்திருந்த ஒரு மரத்தின் அடி மரத்தில் இணைத்துச் செய்யப்பட்டது. இந்த ரகசியம் ரூபதரனுக்கும் பத்மமுகிக்கும் மட்டுமே தெரியும். அதனால் வந்திருப்பவன் ரூபதரன் தானா என்று பரீட்சித்துப் பார்க்கவே அவள் அவ்வாறு கூறினாள். அதற்கு ரூபதரன் கூறிய பதிலைக் கேட்டுத் திருப்தி அடைந்து அவள் அவனிடம் ''என்னை மன்னித்து விடுங்கள். நீங்கள்தாம் என் கணவர் என்பதை உறுதி செய்து கொள்ளவே இப்படிக் கூறினேன். இனி எனக்கு எந்த சந்தேகமும் இல்லை'' என்றான்.

ரூபதரனும் தன் மனைவியின் செயல் கண்டு மகிழ்ந்து அவளைப் பாராட்டினான் அன்றிரவு பத்மமுகி தன் கணவன் பட்ட கஷ்டங்களையும் அனுபவங்களையும் அவனே சொல்லக் கேட்டாள். காலையானதும் ரூபதரன் கவசங்களை அணிந்து கொண்டான். அவன் தீரமதியை எழுப்பினான். யாவரும் யார் கண்ணிலும் படாமல் நகருக்கு வெளியே சென்றார்கள்.

இருவரும் ரூபதரனின் தந்தை பிபிலகன் இருக்கும் இடத்தை அடைந்தனர். ஒரு காலத்தில் ராஜாவாக இருந்த அவன் தற்போது அந்த சிறு இடத்தில் வீட்டைக் கட்டிக் கொண்டு மரம் செடிகளை வளர்த்து ஏழையாக இருந்து வந்தான். ரூபதரன் தன்னுடைய வேலையாட்களிடம் விருந்து சாப்பாடு தயாரிக்கச் சொல்லி விட்டு தோட்டத்திற்குள் சென்றான்.



அங்கு கிழ பிபிலகன் தோட்ட வேலை செய்து கொண்டிருப்பதை அவன் கண்டான். அவன் அணிந்திருந்த சட்டை அழுக்காக இருந்தது. அதைக் கண்ட ரூபதரனின் கண்களில் கண்ணீர் நிரம்பிவிட்டது. உடனே தன் தந்தையைக் கட்டித் தழுவித் தன் அனுபவங்களை எல்லாம் சொல்ல எண்ணினான். ஆனால் இப்போது தன் தந்தை தன்னை அடையாளம் கண்டு கொள்வாரோ அல்லது அவரால் முடியாதோ என்ற சந்தேகம் அவனுக்கு ஏற்பட்டது.

அதனால் அவன் தன் தந்தையை அணுகி ''என்ன தாத்தா! நீ இந்தச் செடிகளை நல்ல விதமாய் வளர்க்கிறாயே. உன்னை நன்கு பார்த்துக் கொள்ள யாருமே இல்லையா? உன் எஜமானருக்கு உன் வேலையில் திருப்தி ஏற்

படாததால் உன்னை கவனிக்காமல் விட்டுவிட்டாரா?'' என்று கேட்டான்.

பிபிலகனும் ''யாரப்பா நீ? உனக்கு எந்த ஊர்?'' என்று கேட்க ரூபதரனும் ''எங்கள் நாடு சஞ்சாரம். ஐந்து ஆண்டு களுக்கு முன் ரூபதரன் என்பவன் என்னைக் கண்டான் இது அவனு டைய நாடுதானே. அவனைப் பார்த் துப் போகவே வந்தேன்'' என்றான். கிழவன் தன் மகனின் பெயரைக் கேட்டதுமே அழலானான். அதைக் கண்ட ரூபதரன் ''அப்பா! என்னை தெரியவில்லையா? நான்தான் ரூப தரன். இனிமேல் நீ எனக்காகக் கண் ணீர் வடிக்க வேண்டாம். நானும் இரு பது ஆண்டுகள் படாத கஷ்டம் பட்டு நம் நாட்டிற்குத் திரும்பி வந்திருக் கிறேன். இதற்குள் என் மனைவியை மணக்க என் வீட்டில் சில கயவர்கள் கூடிக் கொட்டமடித்துக் கொண்டிருந் தார்கள். அவர்களை எல்லாம் கொன்றுவிட்டேன்'' என்றான்.

பிபிலகனும் ''அடேடே! நீ அவர் களைக் கொன்று விட்டாயே. இதாகாக்காரர்கள் உன்னை லேசில் விட்டு விடுவார்களா? மற்ற நாடு களின் உதவி பெற்று உன்னைத் தாக்கு வார்களே!'' என்றான். ரூபதரனும் ''கவலைப்பட வேண்டாம். முதலில் நாம் சாப்பிடுவோம். பிறகு பேசு வோம்.'' என்று கூறித் தந்தையை வீட்டிற்கு அழைத்துச் சென்றான் அங்கு பன்றி மேய்பவனும் ஆடு மேய்ப்பவனும் ரூபதரன் கூறியபடி விருந்து சாப்பாடு தயாரித்திருந்தார் கள். பிபிலகன் குளித்து விட்டு வந்த தும் அவனது உடற்கட்டு குலையாமல் இருப்பது கண்டு ரூபதரன் ஆச்சரியப் பட்டான். யாவரும் உணவு உண்டனர்.

இந்தச் சமயத்தில் இதாகா நகரில் ரூபதரன் செய்த படுகொலை பற்றிய செய்தி பரவி விட்டது. பலர் கோபத் தோடும், வேறு பலர் அழுது கொண் டும் வந்து ரூபத்ரனின் வீட்டை



முற்றுகையிட்டார்கள். இறந்துகிடந்த உடல்களை அடையாளம் கண்டு அவரவர்கள் எடுத்துச் சென்றார்கள். தொலை நாடுகளிலிருந்து வந்தவர்கள் தம் உறவினர்களின் உடல்களைக் கப்பல்களில் அனுப்பினார்கள்.

இதன்பின் இதாகாவில் பிரமுகர்கள் கூட்டம் கூட்டினர். அதில் துர்புத்தியின் தந்தை கனல் தெரிக்க ''நண்பர்களே! இந்த ரூபதரன் செய்த படுகொலையைக் கேட்டீர்களா? இவன் நம் நாட்டுக் கப்பல்களை போருக்குக்கொண்டு போய் அவற்றை மூழ்கடித்தவன். நம் நாட்டின் பல இளைஞர்களைப் போருக்கு அழைத்துப் போய் பலி கொடுத்தவன். இப்போதோ இவன் மட்டும் திரும்பி வந்து இங்கிருந்த வாலிப வீரர்களை படுகொலை செய்து விட்டான். இவன் இப்போது பைலாஸிலோ அல்லது எலிஸிலோதான் தலை மறைவாக இருந்து தப்பி ஓட முயல்வான். அவனைப் பழிக்குப் பழி வாங்கியே தீரவேண்டும். அதுவரை நான் ஓய மாட்டேன்'' என்று உறுமினான்.

அவனது பேச்சைக் கேட்டுப் பலரது மனம் அவன்பால் இரக்கம் கொண்டது. அப்போது அங்கே ஒருவன் வந்து ''இதாகா வாசிகளே! நான் சொல்வதையும் சற்றுக் கேளுங்கள். இந்தப் படுகொலை நடந்தபோது நானும் அங்கே இருந்தேன். ரூபதரனுக்கு புத்திமதி தேவி அப்போது உதவிக் கொண்டிருந்ததை என் கண்ணால் கண்டேன். எனவே இந்தப் படுகொலை தெய்வ சம்மதத்துடன் நடந்திருக்கிறது. எனவே இதற்குப் பழிக்குப் பழி வாங்க நாம் கிளம்பினால் நாம்தான் அழிந்து போவோம்.'' என்றான். ரூபதரன் கொல்லாது விட்டு விட்ட இருவர்களில் ஒருவன்தான் இவன்.

இதைக் கேட்டு கூட்டத்தினர் யாவரும் பயந்து போயினர். அப்போது ஒரு கிழவர் எழுந்து ''நடந்தது என்னவோ



நடந்து விட்டது. இனியும் வீணாக ரத்த சிந்த வேண்டாம். இதில் தவறு யாருடையது என்று பார்த்தால் இறந்து போன அரசகுமாரர்களுடையதுதான் என்பது நன்கு தெரியவரும். இவர்களை எல்லாம் கட்டுப்படுத்தி வைக்கும்படி இவர்களது தந்தையிடம் நான் எவ்வளவோ தடவை கூறினேன். யாரும் அது பற்றி கவலைப்படவில்லை. ரூபதரன் எங்கே திரும்பி வரப் போகிறான் என்று எண்ணித் தானே இவர்கள் அவனது வீட்டில் போய் இருந்து அவனது மனைவியை அவமானப்படுத்தினார்கள். அதற்குத் தக்க தண்டனை தான் இவர்களுக்குக் கிடைத்தது. இதில் வேறு யாருடைய தவறும் இல்லை'' என்றார்.

இதைக் கேட்டு கூட்டத்தில் பெரும்பாலோனோர் திருப்தி அடைந்தார்கள். அதனால் அவர்கள் கலைந்து சென்றனர் ஆனால் அதிருப்தியாளர்கள் சிலர் துர்ஜயனின் தந்தையின் தலைமையில் ஆயுதங்களை எடுத்துக் கொண்டு கிளம்பினார்கள். அவர்கள் பிபிலகனின் இடத்தை அடைந்த போது அவர்களை எதிர்க்கப் பிபிலகனும் தீரமதியும் அவர்களது ஆட்களும் தயாராக நின்று கொண்டிருந்தார்கள். தீரமதி தான் ஒருவனே அவர்களை எதிர்த்துப் போராடிக் கொல்வதாகக் கூறினான்.

அதைக் கேட்ட பிபிலகன் ''சபாஷ் இன்று நான், என் மகன், என் பேரன் ஆகிய மூவரும் ஒரே களத்தில் ஒரே சமயத்தில் திறமையைக் காட்டப் போகிறோம்'' என்று கூறி மகிழ்ந்தான். அவன் எறிந்த ஈட்டி துர்புத்தியின் தந்தையின் மார்பைப் பிளந்தது ரூபதரனும் மற்றவர்களும் தாக்க வந்தவர்களைக் கொன்று தள்ளினார்கள்.

அப்போது புத்திமதி தேவி ''இதாகா வாசிகளே! இந்தச் சண்டையை இத்துடன் நிறுத்துங்கள்'' என்று ஆகாயத்தில் தோன்றிக் கூறினாள். அதைக் கேட்டு யாவரும் திகைத்து நின்றனர். அவர்களது கைகளிலிருந்த ஆயுதங்கள் நழுவி விழுந்தன. ரூபதரனை எதிர்க்க வந்தவர்கள் திரும்பிப் போய் விட்டார்கள்.

இதற்குபின் ரூபதரன் தன் மனைவியுடனும் மகனுடனும் தந்தையுடனும் எதிரிகள் பயமில்லாமல் சுகமாக வாழ்ந்து வரலானான்.

**(முடிவுற்றது)**





# அவன் படி அளப்பான்!

வெகுகாலத்திற்கு முன்பாரசீக நாட்டில் ஒரு பக்கரி இருந்தான். அவன் மகா சோம்பேறி. கை கால்கள், உடல் யாவும் வலிமையாக இருந்தும் ஒரு வேலையும் செய்யாமல் பிச்சை எடுத்து வாழ்ந்து வந்தான். அப்படியும் நீண்ட காலம் தனது ஊரில் இவன் இருக்க முடியவில்லை. ஏனெனில் நாளுக்கு நாள் அவனுக்குப் பிச்சை போடுவோர் குறைந்து கொண்டே போய் முடிவில் யாருமே இல்லாதும் போயினர்.

இதனால் அந்த பக்கரி தன் ஊரை விட்டு வேறு ஊருக்குப் போய்விடத் தீர்மானித்தான். அதனால் அவன்தன் ஊரைவிட்டு கிளம்பிக் காட்டு வழியாக வேறொரு ஊருக்குச் சென்று கொண்டிருந்தான். அப்போது நடுக் காட்டில் கால்களை இழந்த நரி ஒன்று படுத்துக் கிடப்பதைக் கண்டான். அவன் தன் மனதில் ''இந்த நரி எங்கும் போக முடியாதே. இது எப்படி சாப்பிட்டுக் கொண்டு உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறது?'' என்று யோசிக்கலானான்.

அப்போது ஒரு புலி உறுமும் சத்தம் கேட்கவே, அந்தப் பக்கிரி சட்டென அருகில் இருந்த புதரின் பின்னால் பதுங்கிக் கொண்டான். அந்த புலி ஒரு மானைக் கொன்று இழுத்துக் கொண்டு வந்தது. அது அந்த மானின் உடலை அங்கே போட்டு அதன் மாமிசத்தைக் கொஞ்சம் சாப்பிட்டு விட்டு அந்த உடலை அப்படியே விட்டு விட்டு போய் விட்டது. புலி வெகு தூரம் போய் விட்டதைக் கண்ட பிறகே நரி உருண்டு கொண்டே அந்த மானின் உடல் கிடந்த இடத்திற்குச் சென்றது. புலி சாப்பிட்டு விட்டுப்போன அந்த உடலிலுள்ள மீத மாமிசத்தை அந்த நரி சாப்பிடலாயிற்று.

அதைக் கண்ட பக்கிரி ''காலில்லாது நகர முடியாத இந்த நரிக்கு ஆண்டவன் எப்படியோ உணவைக்

—கி. அருணா—

கொடுத்துக் காப்பாற்றுகிறான். அது போல நான் வேலை செய்யாமல் இருந்தாலும் ஆண்டவன் எனக்கும் உணவளித்துக் காப்பாற்றி விடு வான்'' என எண்ணி அக மகிழ்ந்து அங்கிருந்து கிளம்பிச் சென்றான். அவன் புதியதோர் ஊரை அடைந் தான். அங்கு அவன் மசூதி முன் நின்று போவோர் வருவோரிடம் பிச்சை கேட்கலானான்.

அப்போது ஒருவன் அந்தப் பக்கிரி யிடம் ''இது மசூதி. ஆண்டவனைத் தொழும் இடம். நீ வீடுகளுக்குப் போய் பிச்சைக் கேள். ஏதாவது கிடைக்கும்'' என்றான். பக்கிரியோ ''இது ஆண்டவனைத் தொழும் இடம் என்றால் இங்குள்ள ஆண்டவன் எனக்கு எப்படியாவது உணவு அளிப் பான்'' எனக் கூறி அந்த மசூதியின் முன் இருந்த ஒரு மரத்தடியே உட் கார்ந்து கொண்டான். ஆனால் யாருமே அவனுக்குப் பிச்சை போட வில்லை.

நாட்கள் கழிந்து கொண்டே இருந் தன அந்த பக்கிரிக்கு யாரும் எதுவும் கொடுக்கவில்லை. அந்த ஊருக்கு அவன் புதியவனாதலால் அவனை யாரும் ஏறெடுத்துப் பார்க்கவும் இல்லை. அவனது உடல் மிகவும் இளைத்துப் போயிற்று. அவன் தன் உயிருக்கே போராடிக் கொண்டிருந் தான்.

ஒரு நாள் மசூதியிலிருந்து கணீ ரென்ற ஒரு குரல் ''பக்கிரி! கை காலி லும் உடலிலும் வலுவுள்ள நீ ஒரு வேலையும் செய்யாமல் இருந்தால் உனக்கு உணவு எப்படிக் கிடைக் கும்? காட்டில் கிடந்த நரிக்கு எழுந்து செல்லக் கால்கள் இல்லை. அதனால் புலி சாப்பிட்டு விட்டுப் போன எச்சில் உணவு அதற்கு கிடைக்கும்படி செய்தேன். நீ உனக் கும் அதுபோல எச்சில் உணவுதான் கிடைக்க வேண்டுமென்று ஒரு வேலையும் செய்யாமல் அந்த நரி போலப் படுத்துக் கிடக்கிறாயா? உனக்கு உறுதியான கை கால்களும் உடலும் உள்ளனவே. உழைத்துச் சாப்பிடு'' என்றது.

அப்போது பக்கிரிக்குத் தன் தவறு தெரிந்தது. அப்போது முதல்அவன் சோம்பலாக இருப்பதை விட்டு உழைத்துச் சம்பாதித்து முன்னுக்கு வரலானான்.





# அரசனின் போட்டி

தன் முயற்சியில் சற்று மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னா! இந்த பயங்கர நள்ளிரவில் ஏன் இப்படிப் படாத பாடுபடுகிறாய்? உனக்கு மண், பெண், பொன் இவற்றில் ஏதாவது ஒன்றை அடைய வேண்டுமென்ற பிடிவாதமா? சில சமயங்களில் ஒருவன் பிடிவாதமாகச் செய்யும் ஒரு வேலை அவனுக்குப் பயனளிக்காமல் கூடப் போகலாம். அம்முயற்சியே அவனுக்கு ஆபத்தாகவும் முடியலாம். இதற்கு உதாரணமாக உனக்கு இருவரின் கதையைக் கூறுகிறேன். அவர்களில் ஒருவன் அரசன் மாதவசேனன், மற்றவன் மலைவாசியான நந்தி. இனி நான் சொல்லப் போகும் கதையை

## வேதாளம் சொல்லும் கதை



கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

மல்லிபுர மன்னன் மாதவசேனன் அவன் நன்கு திறமையுடன் ஆட்சி புரி பவன் நல்ல மனம் படைத்தவன். மல்லிபுரத்தின் மேற்குப் பகுதி மலை களில் வசிக்கும் மலைவாசிகளின் கூட்டம் போர்க்காலங்களில் மல்லிபுர மன்னனுக்கு உதவி வந்தது. அக்கூட் டத்தின் தலைவன் சமரன். அவனது மகன் நந்தி. அவன் வில் வித்தையை நன்கு பழகித் தேர்ச்சி பெற்றவன், வேகமாக ஓடி குறி பார்த்து அம்பு எய்வதில் கை தேர்ந்தவன்.

மல்லிபுரத்தின் அண்டை நாடு புஷ்பபுரம். அதன் மன்னன் மல்லிபுர மன்னனுக்கு அடங்கிய சிற்றரசன். பெயர் ஜெயவீரன். ஒருமுறை ஜெய வீரனின் மகளான இளவரசி ரத்தி னாங்கி தன் தோழிகளுடன் காட்டுப் பகுதியைச் சுற்றிப் பார்க்கத் தேரில் அமர்ந்து சென்றாள் அந்தத் தேர் ஒரு மரத்தின் கீழ் சென்றபோது மரத்தின் மீதிருந்த மலைப் பாம்பு அவளது பக் கத்தில் விழுந்து அவளை விழுங்கத் தன்வாயைத்திறந்து கொண்டிருந்தது.

அதைக் கண்டு அவளது தோழி களும் தேரோட்டியும் உரக்கக் கத்தி யாராவது வந்து காப்பாற்றுங்கள் என்று கூறினார்கள். அச்சமயம் அங்கு வேட்டையாட வந்த மாதவசேனன் அவர்களது கூக்குரல் கேட்டு ஓடி வந்து யோசித்தவாறே நின்று கொண் டிருந்தான்.

இச்சமயத்தில் மலைவாசி நந்தி அங்கு வந்தான். அவன் மலைப் பாம் பையும் அதனருகே உள்ள பெண்ணை யும் பார்த்து சட்டென அம்பை எடுத்து வில்லில் வைத்து பாம்பின் தலைக்குக் குறி பார்த்து எய்தான். அம்பு பாம்பின் தலைக்குள் குத்தி அதைச் சுருண்டு விழச் செய்து சாகடித்தது. இளவரசி உயிர் தப்பினாள்.

அவள் நன்றிப் பெருக்குடன் நந்தி யைப் பார்த்து ''மிக்க நன்றி. தக்க சம யத்தில் வந்து என்னை காப்பாற்றி னீர்கள். நீங்கள் யாரோ? நான் புஷ்பபுர இளவரசி ரத்தினாங்கி. எனக்கு உத வியதற்காக இந்த வைர மாலையை உங்களுக்குப் பரிசாக அளிக்கிறேன்'' என்று கூறித் தன் கழுத்திலிருந்த வைர மாலையைக் கழற்றி அவனி டம் கொடுத்தாள்.

நந்தியும் அதனைப் பெற்றுக் கொண்டு ''என் பெயர் நந்தி. நான் மலைவாசி'' எனவே ரத்தினாங்கியும் ''மிகவும் சந்தோஷம். உங்களால்

முடியுமானால் எம் தலைநகருக்கு வாருங்கள். என் மெய்க் காவலராக உங்களை நியமித்துக் கொள்கிறேன்'' என்று கூறி மாதவசேனனைப் பார்த்து அவனிடம் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் சென்று விட்டாள். இதையெல்லாம் பார்த்தும் கேட்டுக் கொண்டும் இருந்த மாதவசேனனுக்கு நந்தி மீது பொறாமையே ஏற்பட்டது. அவனால் ரத்தினாங்கியை மறக்க முடியவில்லை.

தனக்கு அடங்கிய ஒரு சிற்றரசனின் மகள் தன்னை ஏறெடுத்துக் கூடப் பாராமல் அலட்சியமாகச் செல்வதா என்று மாதவசேனன் ஆத்திரம் கொண்டான். ஒரு மலைவாசியிடம் அவள் அன்பு காட்டுவதா என்ற பொறாமையே அவன் மனதில் மேலோங்கியது. இதற்கு அணை போட வழி ரத்தினாங்கியைத் தான் மணந்து கொண்டு விடுவதுதான் என்று அவன் தீர்மானித்தான்.

ஆனால் அவனுக்கு ஒற்றர்கள் வாயிலாக நந்தி இளவரசி ரத்தினாங்கியின் மெய்க் காவலனாக நியமிக்கப் பட்டு விட்டரன் என்ற தகவல் கிடைத்தது. இனியும் தாமதிக்கக் கூடாதென எண்ணி புஷ்பபுர மன்னன் ஜெயசேனனுக்கு ஒருகடிதம் எழுதினான். அதில் ''எனக்கு உம் மகளை விவாகம் செய்து கொடுக்குமாறு கேட்கிறேன். ஒரு வேளை நீர் இதற்குச் சம்மதிக்கா விட்டால் புஷ்பபுரத்தின் மீது படை எடுத்து வந்து உம்மைத் தோற்கடித்து வலுக்கட்டாயமாக உம் மகள் ரத்தினாங்கியை நான் மணந்து கொள்வேன்'' என எழுதி இருந்தது.

இக் கடித்ததைப் பெற்ற ஜெயசேனன் ஒரேயடியாக மகிழ்ந்து போய்த் தன் மகளை அழைத்து ''உன் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம். நம் மன்னரே உன்னை மணந்து கொள்ளப் போகிறாராம். இதோ பார் அவர் எழுதிய கடிதம்'' என்று கூறி மாதவசேனன் எழுதி அனுப்பிய கடிதத்தை அவளிடம் கொடுத்தான். ரத்தினாங்கியும் அதை வாங்கிப் படித்துவிட்டு ''அப்பா! அவர் என்னை விரும்பி மணக்கப் போவதாக இதிலிருந்து தெரியவில்லை. படை பலத்தைக் காட்டி உங்களை மிரட்டி என்னை மணக்க விரும்புவதையே இது தெரிவிக்கிறது. இப்படி என்மீது அன்பு கொள்ளாத ஒருவரை நான் மணந்து கொண்டு மகிழ்ச்சியுடன் வாழ முடியுமா? இப்படி கர்வம் கொண்டுள்ளவரை நான் மணக்க முடியாது. இக்கடிதத்திற்கு





நானே பதில் எழுதி அனுப்புகிறேன்'' எனக் கூறினாள்.

ரத்தினாங்கி எழுதிய கடிதத்தில் ''அரசர் பெருமானே! இப்போது யாரையும் மணந்து கொள்ளும் விருப்பம் எனக்கு இல்லை. படை பலம் காட்டி அச்சுறுத்தி என்னை மணக்கும் யோசனையைக் கை விட்டு விடுங்கள். உங்கள் படை கொண்டு எங்கள் நாட்டை நீங்கள் வசப்படுத்திக் கொண்டு விடலாம். ஆனால் அந்தப் படையைக் கொண்டு என் மனதை நீங்கள் வசப்படுத்திக் கொள்ள முடியுமா? இதுபற்றி யோசித்துப் பாருங்கள்'' என்று இருந் தது.

இக் கடிதத்தைப் படித்த ஜெயசேனன் பெருமூச்சு விட்டவாறே அதை மாதவசேனனுக்கு அனுப்பினான். பிறகு அவன் தன் மகளிடம் ''உன்கடிதத்தை படித்து விட்டு மாதவசேனன் கடுங்கோபம் கொண்டு படை எடுத்து வந்து நம்மைச் சிறைபிடித்துப் போகப் போகிறான்'' என்று கூறித் தன் பயத்தை வெளிப்படுத்தினான்.

ஜெயசேனன் எதிர்பார்த்ததுபோல உடனடியாக மட்டுமல்ல, இரண்டு மாதங்களாகியும் மாதவசேனன்படை எடுத்து வரவில்லை. அது அவனுக்கு ஆச்சரியத்தை அளித்தது. மாதவசேனன் வேறொரு பெண்ணை மணந்து கொண்டு விட்டானோ என்று எண்ணினான். அதுவும் நடக்கவில்லை. அப்போது ரத்தினாங்கி ''அப்பா நான் நினைத்தது போலத் தான் நடக்கிறது. என் கடிதத்தைப் படித்த பின் மாதவசேனர் படை எடுக்கும் எண்ணத்தைக் கைவிட்டு என் பால் தன் அன்பைத் திருப்புவார் என எதிர்பார்த்தேன். அதுதான் நடக்கிறது'' என்றாள்.

இதற்குச் சில நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் மாலை ரத்தினாங்கி பூங்காவில் உலாவிக் கொண்டிருந்தாள். அப்போது பூங்கா வாசலில் நின்று நந்தி காவல் புரிந்து கொண்டிருந்தான். அப்போது ரத்தபீஜம் என்ற நச்சுப் பாம்பு கீழே கிடந்த சருகு இலைகளின் ஊடே ஊர்ந்து வந்து ரத்தினாங்கியைத் தீண்டியது, அவள் ''ஐயோ'' என்று அலறி விழ நந்தி ஓடி வந்து, ஊர்ந்து நெளிந்த பாம்பைப் பார்த்துத் தன் வாளால் அதை வெட்டிக் கொன்று போட்டு விட்டு ஓடிப் போய் வைத்தியரை அழைத்து வந்தான். வைத்தியர் இறந்து கிடந்த பாம்பைப் பார்த்து விட்டு மருந்து கொடுத்தவாறே ''இது ரத்தபீஜம் என்ற கொடிய விஷப்

பாம்பு. இவள் விஷம் இறங்கிப் பிழைத்து விடுவாள். ஆனால் அவளுக் குக் கண் பார்வைதான் போய்விடும்'' என்றார்.

அது கேட்டு ஜெயசேனன் ''ஐயோ! என் மகள் கண்ணை எந்த வைத்தியத் தாலும் சரிப்படுத்த முடியாதா?'' என்று வைத்தியரிடம் கேட்டான். அவரும் ''இதற்கு ஒரே வைத்தியம் தான் உள்ளது, இந்த ரத்தபீஜப் பாம்புகள் வாழ்வது ரத்தபீஜ மலை அங்கு சர்ப்ப கந்தம் என்ற மரம் உள்ளது. அதன் மலரை எடுத்து பார்வை இழந்த கண்களைத் தொட் டால் போதும். பார்வை உடனே வந்து விடும். ஆனால் அந்த மலர் கிடைப் பது மிகவும் கஷ்டம் அது சர்ப்ப கந்த மரத்தில் ஐம்பது ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் பூக்குமாம். அந்த மரத் தைச் சுற்றி ரத்தபீஜப் பாம்புகள் இருந்து கொண்டே இருக்குமாம். அந்த மலரை ஒரு தடவைதான் பயன் படுத்த முடியும். இவ்வளவு கடின மான வேலையை யாரால் செய்ய முடியும்?'' என்றார்.

அப்போது நந்தி ''அரசே! நான் ரத்தபீஜ மலைக்குப் போய் அந்த மலரை எடுத்து வருகிறேன்'' என்று கூறி அரசனின் ஆசிகளைப் பெற்றுக் கொண்டான். பிறகு அரசனின் லாயத்திலிருந்து மிக நேர்த்தியான ஒரு குதிரையைத் தேர்ந்தெடுத்து அதன் மீது அமர்ந்து ரத்தபீஜ மலைக்குச் சென்றான். அங்கு செல்ல அவனுக்கு ஒரு வாரமே பிடித்தது.

நந்தி ரத்தபீஜ மலைக்குப் போயி ருக்கிறான் என்ற செய்தியைக் கேட்ட தும் மாதவசேனனும் அந்த மலைக்குச்



சென்றான். நந்தி சர்ப்ப கந்த மரத்தைச் சற்றுத் தொலைவிலிருந்து பார்த்தான். அந்த மரத்தின் உச்சியில் சர்ப்ப கந்த மலர் இருந்தது. அதை எப்படிப் பறிப்பது என்று யோசிக்கலானான். மரத்தைச் சுற்றி ரத்தபீஜ பாம்புகள் இருந்தன. அதனால் மரத்தின் மீது ஏறி அந்த மலரைப் பறிக்க முடியாது. அதை அங்கு நின்றபடியே அம்பை எய்து மலரை சற்று தூரம் போய் விழச் செய்ய வேண்டும். அது கடின மான வேலையே. ஆனால் எப்படி யும் மலரைப் பறித்துத் தானே ஆக வேண்டும்?

என்ன ஆனாலும் ஆகட்டும் என்று எண்ணி அவன் வில்லில் அம்பை வைத்து அந்த மலரைக் குறி பார்த்து அடித்தான். மலர் மரத்திலிருந்து தனி யாகிச் சற்று தூரத்தில் போய்த்தான்



விழுந்தது, ஆனால் உடனேயே ரத்த பீஜப் பாம்புகள் அங்கு விரைந்து சென்று அந்த மலரைச்சூழ்ந்து கொண் டன. இதைக் கண்ட நந்தி என்ன செய் வது என்று யோசித்தவாறே அங்கு நின்றான்.

அப்போது ஒரு குதிரை வேகமாக வந்து அங்கே நின்றது. அதன் மீது மாதவசேனன் அமர்ந்திருப்பது கண்டு நந்தி ஆச்சரியப்பட்டான், மாதவசேன னும் தரை மீது சர்ப்ப கந்த மலர் விழுந்து கிடப்பதையும் அதைச்சுற்றி ரத்தபீஜப் பாம்புகள் இருப்பதையும் கண்டான். உடனே அவன் நந்தியைப் பார்த்து ''ஓகே! நீ எனக்கு முன் வந்து விட்டாயா? இந்த மலரைப் பறித்துக் கொண்டு போய் ஜெயசேனனிடம் கொடுத்துவிட்டு ரத்தினாங்கியை நீ அடையப் போகிறாயா?'' என்று தன் பொறாமையை வெளிப்படுத்திக் கேட்டான்.

நந்தியும் ''நீங்கள் இந்த ஆபத்தான வேலையைச் செய்ய இங்கு வருவீர் களென்று நான் கொஞ்சமும் எதிர் பார்க்கவில்லை. நான் சர்ப்பகந்த மலரை அம்பால் அடித்து வீழ்த்தி னேன். அது அங்கு கிடக்கின்றது. அதைச் சுற்றி ரத்தபீஜப் பாம்புகள் இருக்கின்றன. நீங்கள் அதை எடுக்க அங்கே போகாதீர்கள். உங்களுக்கு அது ஆபத்து'' என்று கூறிவிட்டு ஒரு வினாடிகூடத் தாமதியாமல் மலரை நோக்கி ஓடினான். அவன் ஓரிடத்தி லிருந்து பாய்ந்து அந்த மலரை எடுத்த போது ஒரு நச்சுப் பாம்பு அவனைத் தீண்டி விட்டது. ஆனாலும் அவன் வேகமாக அப் பாம்புகளை எல்லாம் ஒரே தாண்டில் தாண்டிக் குதித்து மாதவசேனனை நோக்கி ஓடி வந் தான்.

அவன் அந்த மலரை மாதவசேன னிடம் கொடுத்து ''அரசே! நீங்கள் இந்த மலரை எடுத்துக் கொண்டு போய் ஜெயசேனனிடம் கொடுத்து ரத்தினாங்கிக்குப் பார்வை கிடைக்கச் செய்து அவளை நீங்கள் மணந்து கொள்ளுங்கள். என்னைப் பற்றிக் கவலைப் படவேண்டாம், நான் பார்வை இழந்து இறந்துபோகத்தான் போகிறேன்'' என்றான் கீழே சாய்ந்த வாறே. மாதவசேனன் சட்டென நந்தி யைத் தாங்கிக் கொண்டு ''நண்பா! இதுநாள் வரை நான் உன்னைத் தவறு தலாக எண்ணிவிட்டேன். நீ மகான், மாபெரும் தியாகி, நீ உயிர் வாழ வேண்டும். உன்னை இறக்க விடமாட் டேன். உலகில் எவ்வளவோ வைத்

திய முறைகள் உள்ளன. அவற்றில் ஏதாவது ஒன்றைக் கொண்டு நீ இழந்த பார்வையை மீட்டுத் தருகிறேன்'' எனக் கூறி அவனைத் தன் குதிரை மீது உட்கார வைத்துக் கொண்டு தன் தலை நகருக்குச் சென்றான்.

வேதாளம் இக் கதையைக் கூறி ''மன்னனே! இந்த நந்தியின் போக்கு முன்னுக்குப் பின் முரணாக இல்லையா? அவன் ரத்தினாங்கியைக் கண்டு பேசிய பின் அவனது மெய் காவலாளியாகப் பணிபுரிய அவளது நகருக்குச் சென்றது அவளை மணக் கும் நோக்கத்தோடு தானே? அப்படி இருக்க சர்ப்பகந்த மலரை மாதவ சேனனிடம் கொடுத்து அதனால் ரத்தினாங்கி பார்வை கிடைக்கப் பெற்றதும் அவளை அவன் மணந்து கொள்ள நந்தி கூறியது எந்த விதத்தில் சரி? மாதவசேனன் வரும் வரை காத்தி ருந்து அவன் வந்த பின் ரத்தபீஜப் பாம்புகளிடையே உள்ள சர்பகந்த மலரை எடுக்கப் போனது ஏன்? மேலும் சர்ப்பகந்த மலரை பாம்பு களிடையிலிருந்து எடுத்து வர மாதவ சேனன் போகக்கூடாது என்று நந்தி ஏன் தடுத்தான்? இப்படிப்பட்ட வனை மாதவசேனன் மாபெரும் தியாகி எனப் புகழ்ந்தது சரியா? மாதவசேனன் ரத்தினாங்கியை வலுக் கட்டாயமாகக் கூட மணந்து விடுவது எனத் தீர்மானித்தவன்தானே. ஆனால் ரத்தினாங்கியின் கடிதத்தைப் பார்த்து ஏன் அவ்வாறு செய்யவில்லலை? அவனுக்கு ரத்தினாங்கி மீது அன்பு இல்லை என்றா இதன் பொருள்? இது உண்மையானால் சர்ப்பகந்த மலரக் கொண்டு வரும் நோக்கத்தோடு அவன் ஏன் ரத்தபீஜ மலைக்குச் செல்ல வேண்டும்? நந்தி மீது கொண்ட பொறாமையாலா? எனது இக் கேள்வி களுக்கெல்லாம் பதில் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித் துச் சுக்கு நூறாகிவிடும்'' என்றது.



அதற்கு விக்கிரமன் ''நந்தி ரத்தினாங்கியின் மெய்க்காவலனாக அவளை மணக்கும் நோக்கத்தோடு சேர்ந்தான் என எண்ணுவதே தவறு. அது போல ரத்தினாங்கியும் நந்தியை விரும்பினாள் என நினைத்துக் கொள்வதும் தவறு. அவன் வில்வித்தையில் பெற்றுள்ள தேர்ச்சியைக் கண்டு அத்திறமையைப் பாராட்டி அதற்குப் பரிசாக மெய்க்காவலன் பணியை அவனுக்கு அளித்தாள். ரத்தினாங்கி தன் மானம் நிறைந்தன். அதனால்தான் படைபலம்காட்டி வலுக்கட்டாயமாகத் தன்னை மாதவசேனன் மணக்க முயன்றபோது சரியான பதில் கடிதம் எழுதி அனுப்பி அவனுக்கு உண்மையை உணர்த்தினாள். அக் கடிதத்தைப் படித்தபின் மாதவசேனன் படைபலத்தாலால்லாமல் அன்பைக் கொண்டு ரத்தினாங்கியை அடையத் தீர்மானித்தான். அவள் மீது ஆழ்ந்த அன்பு கொண்டவன் என்பதற்கு அத்தாட்சி அவன் சர்ப்பகந்த மலரைக் கொண்டுவர ரத்தபீஜ மலைக்குச் சென்றதேயாகும். நந்தி சர்ப்பகந்த மலரைக் கீழே விழவைத்து பின் அதைப் பாம்புகளிடையே இருந்து எடுத்து வருவது தன் உயிருக்கே ஆபத்தானது என்பதை உணர்ந்தான். தான் இறந்து விட்டால் யார் அந்த மலரை ரத்தினாங்கியிடம் கொண்டு போய்ச் சேர்ப்பார்கள் என்று யோசித்தவாறே தான் நின்று கொண்டிருந்தான் மாதவசேனனைக் கண்டதும் அவனது பிரச்சினைக்கு பதில் கிடைத்துவிட்டது. எனவே மாதவசேனனை மலரை எடுக்கப் போகவிடாமல் தடுத்து அவனே போய் மலரை எடுத்து பாம்புக்கடிபட்டுக் கொண்டுவந்தான். மலரையும் மாதவசேனனிடம் கொடுத்து ரத்தினாங்கிக்குப் பார்வை கிடைக்கச் செய்து அவளை அவன் மணந்து கொள்ளக் கூறினான். அதுவரை அவன் மீது பொறாமை கொண்டிருந்த மாதவசேனன் அவனது உயரிய நடத்தையையும் குணத்தையும் கண்டே அவனை மாபெரும் தியாகி என்று பாராட்டினான்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதில்களால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# மீண்டும் உள்நாட்டில்

கருத்து: **மீராநாயர்** ◆ ஓவியர்: **கௌதம் சென்**




அழகிய பவளத் தீவு களான லட்சத்தீவுகளை விட்டு உள் நாட்டிற்கு இப்போது நாம் வந்துவிட்டோம். நாம் வந்துள்ள ஊர் கடற்கரையோரமுள்ள பத்மநாப புரம். இது திருவனந்தபுரத்திலிருந்து 55 கி.மீ. தொலை வில் உள்ளது.

இப்போது இது தமிழ் மாநிலத்தில் இருந்தாலும் 16 முதல் 18வது நூற்றாண்டு வரை திருவாங்கூர் மன்னர் கள் வாழ்ந்த பத்மநாபபுர அரண்மனை பத்மநாபபுரக் கோட்டையின் மத்தியில் அமைந்துள்ளது. மேற்குக் கடற்கரையில் மிகச் சிறந்த மரவேலைப்பாடுகள் கொண்டுள்ளதாக இந்த அரண்மனை கருதப் படுகிறது.

இதன் சுவர்கள் சூரிய ஒளியின் அதிகம் பிரகாசத்தையும், சூரியனின் வெப்பத்தையும் தடுக்கும் வகையில் அமைந்துள்ளன. கண்ணாடி போல் பளபளக்கும் இந்த அரண்மனையின் தரை தென்னங் கொட்டாங்குச்சிகளையும் முட்டையின் வெள்ளைக் கருவையும் கொண்ட கலவையாலானது. போர்த்துக்கீசியர் பரிசளித்த 63வித மருந்து மரங்களால் மன்னரின் கட்டில் தயாரிக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. அரசியின் கட்டில் தந்தத்தாலானது.

அரண்மனைத் தூணின் மீது வைக்கப் பட்டுள்ள ஒரு பெரிய உருண்டைக்கல் முன் காலத்தில் இராணுவத்தில் சேரவந்தவர்களைப் பரீட்சிப்பதற்குப் பயன் பட்டதாம். அந்தக் கல்லைத் தூக்க முடிந்தவர்களே இராணுவத்தில் சேர்க்கப்பட்டனராம்.



பத்மநாபபுர
அரண்மனையின் நுழைவாசல்



கன்னியாகுமரி அம்மன்

பத்மநாபபுரத்திற்கு 16 கி.மீ. தெற்கே சுசீந்திரம் கோவில் உள்ளது இக்கோவில் முப்பது மண்டபங்களைக் கொண்டது. இவ்வூரில் தன் பாவங்களைப் போக்க இந்திரன் கொதிக்கும் நெய்க்குள் தன் கையை விட்டானாம். சில ஆண்டுகளுக்கு முன் வரை கூடத் தான் நிரபராதி என ஒருவன் நிரூபிக்க இக்கோவிலில் கொதிக்கும் நெய்க்குள் கையை விட்டு எடுப்பது வழக்கமாக இருந்தது. அவனது கை மூன்று நாட்களாகியும் கொப்பளிக்கா விட்டால் அவன் நிரபராதி என அறிவிக்கப்படுவானாம்.

இந்தக் கோவில் கோபுரத்தருகே 2500 ஆண்டுகளாக உள்ள ஒரு மரம் உள்ளது. அதன் அடிமரப் பொந்தில் மும்மூர்த்திகளான பிரம்மா, விஷ்ணு சின ஆகியோர் லிங்கவடிவில் உள்ளனர். இங்கு ஒரு மிகப் பெரிய அனுமாரின் சிலை உள்ளது. பன்னீரை கங்கை நீரோடு கலந்து இதன் தலையில் அபிஷேகம் செய்து அந்த நீர் சிலையின்பாதத்தில் வந்து விழுந்ததும் அதை எடுத்து 'தீர்த்தமாக' வழங்குகிறார்கள்.

இக்கோவிலின் வடக்கு மண்டபத்தில் ஒரே கல்லாலான நன்கு இசை ஒலிக்கும் தூண்கள் உள்ளன. இவற்றில் உருண்டையான கம்பிபோல உள்ள பகுதிகள் இடைவெளிகள் கொண்டவை இவற்றைத் தட்டினால் சில ஜலதரங்கம் போலும், சில தம்புராமீட்டுவது போலும், சில மிருதங்கம் வாசிப்பதுபோலும் சில வீணையின் நாதம் போலும் ஒலிக்கின்றன.

நம் நாட்டின் தென் முனைதான் கன்னியாகுமரி. இங்கு வங்காளக் குடாக் கடல், இந்து மகாசமுத்திரம், அரபிக் கடல் ஆகிய மூன்றும் ஒன்று சேர்கின்றன. இங்குதான் குமரி அம்மனின் திருக்கோவில் உள்ளது.



தலபுராணப்படி சுசீந்திரம் கோவிலின் சுவாமி கன்னியா குமரியிலுள்ள அம்மனை மணக்க விரும்பினாராம். இத்திருமணம் நடந்தால் அம்மனின் சக்தி குறைந்து விடும் எனப் பயந்து தேவர்கள் நாரதரிடம் யோசனை கேட்டார்களாம். நாரதர் அதற்கு ஒரு வழி செய்வதாகக் கூறி சுசீந்திரக் கோவிலின் சுவாமியைக் கண்டு அவர் அந்த அம்மனை விடியற்காலக் கோழி கூவுவதற்கு முன் முகூர்த்த நாளில் மணக்க வேண்டுமெனக் கூறி முகூர்த்த நாளையும் குறித்துக் கொடுத்தார். முகூர்த்தத்திற்கு சுவாமி நடு ராத்திரியில் சுசீந்திரத்திலிருந்து கிளம்பி கன்னியா குமரிக்குப் போய்க்கொண்டிருந்தாராம். நடு வழியில் நாரதர் கோழிபோல் மாறி நின்று கத்தவே சுவாமி முகூர்த்த வேளை தவறிவிட்டது என்றும் இனிப் போய் பயனில்லை என்றும் எண்ணி சுசீந்திரத்திற்கே திரும்பிவந்துவிட்டாராம்.

கன்னியாகுமரியில் அம்மன் திருமணத்திற்கான எல்லாப் பொருள்களையும் சேகரித்து வைத்துக் கொண்டு சுவாமியின் வருகையை எதிர் பார்த்துக் கொண்டிருந்தாள். முகூர்த்த நேரம் வந்தும் அவர் வராததால் கோபம் கொண்டு திருமணத்திற்கு வைத்திருந்த பொருள்களை எல்லாம் தூக்கிக் கடற்கரையில் எறிந்தாளாம். அவையாவும் பல நிற மணல்களாக மாறி இன்றும் கிடக்கின்றனவாம்.

இந்த மணலில் மோனோஸைட், யுரேனியம், அணுசக்தியை உற்பத்தி செய்யும் அணுக்கள் யாவும் உள்ளன. கன்னியாகுமரியின் மற்றொரு அற்புதம் அங்கு கட்டப்பட்டுள்ள காந்தி மண்டபம். அங்கு காந்திஜீயின் அஸ்தி முன்பு வைக்கப்பட்டிருந்தது. இங்குள்ள கருப்புக் கல் அந்த அஸ்தி வைக்கப் பட்டிருந்த இடத்தைக் குறிக்கிறது. இந்தக் கல்லுக்கு நேர் உயரே கூரையில் ஒரு துவாரம் உள்ளது. ஒவ்வொரு ஆண்டு அக்டோபர் 2ந் தேதியில் மட்டும் அந்த துவாரம் வழியாய் சூரிய ஒளிபாய்ந்து அக் கல்லின் மீது விழுகிறது. இதைக் காண மக்கள் அன்று அங்கு கூட்டமாகக் கூடுகிறார்கள் அக்டோபர் 2 காந்திஜீ பிறந்தநாள்.





கன்னியாகுமரி கோவிலிலிருந்து அரை கிலோ மீட்டர் தூரத்திலுள்ள பாறை மீதுதான் சுவாமி விவேகானந்தர் அமர்ந்து தியானம் செய்வது வழக்கமாம். அவர் 1892 டிசம்பரில் மூன்று நாட்கள் இங்கு

தியானம் செய்தாராம். இங்கு நின்று கன்னியா குமரி அம்மனும் சிவ பிரானை நினைத்து பிரார்த்தனை செய்ததாகவும் மக்கள் நம்புகிறார்கள்.

விவேகானந்த கேந்திரம் 1970ல் இப்பாறை மீது விவேகானந்தர் பாறை நினைவு மண்டபத்தைக் கட்டியது. இதைக் காண எல்லா நாட்டுப் பயணிகளும் இங்கு வருகிறார்கள் இதற்குச் சற்று தூரத்திலுள்ள ஒரு பாறை மீது மிக உயரமான திருவள்ளுவர் சிலை ஒன்றை நிறுவ ஏற்பாடாகிக் கொண்டிருக்கிறது.



**காந்திமண்டபம்**

கன்னியாகுமரியிலிருந்து சிறிது தூரத்தில் மருத்துவமாலை என்னும் குன்று உள்ளது. இங்கு மருந்துச் செடிகளும் மூலிகைகளும் நிறையக் கிடைக்கின்றன. ஆயுர் வேத வைத்தியமுறையில் மருந்துகள் தயாரிக்க இவை பெரிதும் பயன்படுகின்றன.

இராமாயணக் கதைப்படி இலங்கைப் போரில் லட்சுமணன் நாகாஸ்திரத்தால் அடிபட்டு நினைவிழந்து விழுந்தபோது அவரைப் பிழைக்க வைக்க அனுமார் இமயமலைத் தொடரில் ஒரு மலை மீதுள்ள சஞ்சீவினி மூலிகையைத் தேடிச் சென்றார். சட்டென அது அவரது கண்களுக்குத் தென்படவில்லை. அதனால் அவர் அந்த மலையையே பெயர்த்து எடுத்துக் கொண்டு வந்தார். வரும் வழியின்அந்த மலையின் ஒரு பகுதி உடைந்து கன்னியாகுமரியருகே விழவே அது மருத்துவா மலை என்று பெயர் பெற்றதாம். இங்கு ஒரு லிங்கம் உள்ளது. அதுவும் அனுமாரால் தான் பிரதிஷ்டை செய்யப்பட்டது என நம்பப்படுகிறது.





# கற்பனையில் கவி

ராசீபுரம் ராமசர்மாவுக்குப் பிறந்த இரண்டு குழந்தைகளும் பெண் குழந்தைகளே. அவர் மனதில் தமக்கு ஆண் குழந்தை இல்லையே என்ற மனக்குறை மிகவும் இருந்தது. அப்போது நாமக்கல்லிலிருந்து ராசீபுரம் வந்த நாராயண சாஸ்திரி ராமசர்மாவின் வீட்டில் தங்கினார். அவரிடம் ராமசாஸ்திரி தன் மனக் குறையைக் கூறினார்.

அப்போது நாராயண சாஸ்திரி ''நீங்கள் எங்கள் ஊர் நாச்சாரம்மன் பற்றிக்கேள்விப்பட்டது இல்லையா? அந்த அம்மனுக்குத் திருவிழா நடக்கும் போது கரகம் எடுத்தாடி பூக்குழி மிதித்து பக்தியுடன் தனக்கு இன்ன குழந்தை வேண்டுமென்று வேண்டிக் கொண்டால் கட்டாயம் அதே குழந்தை பிறக்கும். இதற்கு சாதி, மதம் என்பதெல்லாம் இல்லை. அம்மன் திருவிழா ஆடிப் பூரத்தன்று வருடா வருடம் நடைபெறும். எனக்கும் முதலில் பிறந்தவை இரண்டு பெண் குழந்தைகளே. அதன் பிறகு நான் அம்மன் பூக்குளி மிதிக்க ஆண் குழந்தையை அடைந்தேன்'' என்றார்.

இதைக் கேட்ட பின் ராமசர்மா அந்த ஆண்டு ஆடிப் பூரத்தின் போது நாமக்கல் போய் நாச்சாரம்மன் கோவில் பூக்குளி மிதிக்கப் போவது என்று தீர்மானித்துக் கொண்டார். அதன்படி ஆடிப் பூரத்திற்கு முதல் நாளிரவு அவர் நாமக்கல்லை அடைய எண்ணிக் கிளம்பினார்.

அவரது ஊருக்கும் நாமக்கல்லுக்கும் அதிக தூரமில்லை மூன்று மைல் இடையில் புங்கனூர் என்ற கிராமம் இருந்தது. அதை அடையும் போதே நல்ல மழை பிடித்துக் கொண்டதால் அங்கே அவர் தங்க வேண்டியதாயிற்று. அங்கு கிராமப் புரோகிதர் வீட்டைத் தேடி அவர் சென்றார். அந்தப் புரோகிதர் ராமசர்மாவை அவ்வளவாக அறியாத போதிலும் தம் வீட்

—எஸ். சோபினி—



டுக்கு வந்திருப்பவரும் ஒரு புரோகி தரே எனக் கண்டு வரவேற்றார்.

பேச்சு வாக்கில் ராமசர்மா நாமக் கல் நாச்சாரம்மன் கோவில் பூக்குளி மிதிக்கப் போவதைக் கேட்டு அந்தப் புரோகிதர் ஆச்சரியப்பட்டார். அவர் ராமசர்மாவிடம் ''வேதங்களைப் படித்த நாமே இந்த மாதிரி எல்லாம் நம்பிக்கை கொள்ளலாமா? உங் களுக்கு ஏற்கனவே இரு பெண்கள் இருக்கிறார்கள. இப்போது நீங்கள் பூக்குளியில் இறங்கிப் பிரார்த்தனை செய்வதால் ஆண் குழந்தை பிறந்தால் மிகவும் நல்லதே. ஆனால் மூன்றாவ தும் பெண் குழந்தையாகப் பிறந்து விட்டால் எப்படித்தான் மூன்று பெண்களுக்கும் கல்யாணம் செய்து வைக்கப் போகிறீர்களோ?'' என்று கேட்டார்.

ராமசர்மா ''மரம் வளர்ப்பவன் தண்ணீர் விடாமலா போய்விடு வான்? அதெல்லாம் பகவத் சங்கல் பம்'' என்றார்.

அதைக் கேட்டு அப் புரோகிதர் சிரித்தார். இதற்குள் அவர்கள் சாப் பிட இலைகள் போடப்படவே இரு வரும் எழுந்து போய் சாப்பிட அமர்ந் தனர். புரோகிதரின் மகள் நீலா பரி மாறலானாள். அப்போது ராமசர்மா அப் புரோகிதரிடம் ''உங்களுக்கு எவ்வளவு பையன்கள்? எவ்வளவு பெண்கள்?'' என்று கேட்டார்.

அப்போது அந்தப் பெண்ணே ''ஐயா. நான் இவரின் ஒரே மகள். எனக்கு ஒரு அண்ணன் இருந்தான். என் தகப்பனார் அம்மனின் பூக்குளி மிதித்து வேண்டி அவனை அடைந் தார். ஆனால் அவன் தன் இருபதாவது வயதில் இறந்து போனான். மகன் போன கவலையில் என் தாயாரும் இறந்து போனாள். என் தகப்பனா ருக்குப் புரோகிதம் ஒன்றில் தான் வரும்படி. வேறு எந்த வகையிலும் வரும்படி கிடைக்க வழி இல்லை. இவர் ஒருவரை வளர்த்துப் புரோகித ராக்கி அவரை எனக்கு மணம் செய்து வைத்தார். அவர் இப்போது பக்கத்து ஊருக்குப் புரோகிதம் செய்து வைக்கப் போயிருக்கிறார். இப்போது என் தகப்பனாருக்கு மகன் அவரது மாப் பிள்ளைதான்'' என்றாள்.

இதைக் கேட்டு ராமசர்மாவின் மனம் இளகியது. தன்னை உபசரித்து உணவளித்த அவர்களுக்கு ஆறுதலா கச் சில வார்த்தைகள் கூற நினைத்து அவர் ''பெண்ணே இறைவனது படைப்பில் ஆணும் பெண்ணும் சம

மான அறிவு கொண்டவர்களே. காயத்திரி, சரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி ஆகிய நாம் வழிபடுபவர்களெல்லாம் பெண்கள்தாமே! ஆனால் வழிவழியாக ஒரு நம்பிக்கையில் ஆணை உயர்வாக ஏனோ மதிக்கிறோம். இம்முறை பூக்குளி மிதித்து வேண்டுதல் செய்த பிறகும் எனக்குப் பெண் குழந்தை பிறந்தால் அதை நான் ஆண் குழந்தையை வளர்ப்பது போலத்தான் வளர்ப்பேன். இது நான் செய்யும் சத்தியம்'' என்றார்.

நீலாவும் ''உங்களுக்கு ஆண் குழந்தை தவறாமல் பிறப்பான். ஆனால் பெண் குழந்தையும் ஆண் குழந்தைக்கு எவ்விதத்திலும் குறைந்ததல்ல என உலகம் நம்பும் நாள் வெகு தொலைவில் இல்லை'' என்று கூறினாள். ராமசர்மாவும் அன்றிரவு அங்கு தங்கிவிட்டு விடியற்காலையில் எழுந்து நாமக்கல்லுக்குச் சென்றார். அங்கு கோவில் அர்ச்சகரின் அனுமதி பெற்று பூக்குளி மிதித்துஅம்மனை வேண்டிக் கொண்டு தம் ஊருக்குத் திரும்பி வந்தார்.

இதற்கு ஓராண்டுகளுக்குப் பின் அவரது மனைவி இரட்டைக் குழந்தைகளைப் பெற்றெடுத்தாள். அவற்றில் ஒன்று ஆண். மற்றது பெண். இரு குழந்தைகளும் தோற்றத்தில் ஒன்று போல இருந்தன. அவை வளர வளர நடை பாவனை எல்லாம் ஒன்று போலவே பெற்றிருந்தன. ராமசர்மா அவ்விரு குழந்தைகளையும் சமமாக பாவித்து ஒரே விதமாய் எவ்விதப் பாகுபாடுமின்றி வளர்த்து வந்தார். அவற்றிற்கு பசுபதி என்றும் பார்வதி என்றும் பெயரிட்டார்.



அவர்களிருவருக்கும் ஒரே மாதிரியான கல்வி போதிக்கப்பட்டது. அவர்கள் இருவரும் வேத சாஸ்திரங்களை நன்கு பயின்றார்கள். அவர்கள் இருவரும் எதிலும் சரிநிகர்சமானமாக முன்னேறி வந்தார்கள். அவர்கள் பிறந்த அதிர்ஷ்டமோ என்னமோ ராமசர்மாவின் வாழ்க்கைத் தரம் உயர்ந்தது. அவரது மூத்த மகளை ஜமீன்தாரரின் ஆஸ்தானப் புரோகிதர் தம் வீட்டு மருமகளாக்கிக் கொண்டார் இரண்டாவது மகளுக்கும் ஒரு பணக்கார மாப்பிள்ளை கிடைத்து விட்டான். இனி பசுபதிக்கும் பார்வதிக்கும் தான் அவர் நல்ல வழி செய்தாக வேண்டும்.

அவர்களிருவரும் மாபெரும் பண்டிதர்களெனப் புகழ் பெற்றார்கள். இரட்டைக்கவிஞர்களாக கவிதைகள் புனைந்தார்கள். ஆசு கவிகளாகத்

திகழ்ந்தார்கள். அவ்விருவரைப் பற்றி ஜமீன்தாரரும் கேள்விப்பட்டார். அவர்களைத் தம் தர்பாருக்கு வர வழைத்தார். அவர்களும் ஆசுகவிதைகள் பாடி எல்லோரையும் பிரமிக்க வைத்தார்கள்.

அவர்கள் அவ்வாறு பாராட்டுகளைப் பெற்றது ஜமீன்தாரரின் ஆஸ்தான வித்வானுக்குப் பிடிக்கவில்லை அதனால் அவர் இலக்கியம், வேத சாஸ்திரம் ஆகியவை சம்பந்தமாகக் கேள்விகளை அடுக்கடுக்காக கேட்டார். அவர்களும் அவர் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் சற்றும் சளைக்காமல் பதில் கூறி வரவே சபையோர் அவர்களைப் பாராட்டிக் கை தட்டித் தம் மகிழ்ச்சியைத் தெரிவித்தார்கள்.

இதனால் ஆஸ்தான பண்டிதருக்கு ஆத்திரம் அதிகரித்தது. அவரும் ''நானும் உங்கள் இருவருக்கும் சற்றும் சளைத்தவனலல்ல. நானும் ஆசுகவி பாடும் திறமை பெற்றவனே'' எனக் கூறி ஒரு கவிதையைப் புனைந்து உரைத்தார்.

அப்பண்டிதரின் மனப் போக்கு என்ன என்று ஜமீன்தாரருக்கும் தர்பாரில் கூடி இருந்த பலருக்கும் புரிந்து விட்டது. அப்போது பசுபதியும் பார்வதியும் ''பண்டிதரே! நீங்கள் கற்பனையில் ஏறும் கவி என ஒப்புக் கொள்கிறோம்'' என்றார்கள் அது கேட்டு அவர்கள் தம்மைப் புகழ்ந்ததாக எண்ணி ஆஸ்தான பண்டிதர் மகிழ்ந்து போனார். ஆனால் ஜமீன்தாரரும் சில பிரமுகர்களும் பலமாகச் சிரிக்கவே பண்டிதரும் அவர்கள் ஏன் சிரிக்க வேண்டுமென்று யோசிக்கலானார்.

அப்போது ஜமீன்தாரரே ''ஆகா! கற்பனையில் ஏறும் கவி என்றால் கற்பனை மிகுந்த கவிஞர் எனவும் கொள்ளலாம். அல்லது கல் பனை மரத்தில் ஏறும் குரங்கு எனவும் கொள்ளலாம் இதில் எந்த அர்த்தத்தை எடுத்துக் கொள்வது என்பதை இரட்டையர்கள் நம்மிடமே விட்டது அவர்களது திறமையைக் காட்டுகிறது'' எனக் கூறி அவர்களுக்கு பரிசளித்தார். அவர்களை ஆஸ்தான கவிஞர்களாகவும் அவர் நியமித்தார்.

ஆஸ்தான பண்டிதரின் முகம் சிவந்தது. எதுவும் பேசமுடியாமல் தலை குனிந்து நின்றார்.



# பொன்மயமான பொழுதுகள் - 8





(1) இது ராஜஸ்தான் மாநிலத்திலுள்ள மிக அற்புதமான ஜைனக் கோவில்களில் ஒன்று இது 1491ல் கட்டப்பட்டது. இதில் 1444 தூண்கள் உள்ளன. இந்தத்தூண்களில் எது ஒன்றும் மற்றதைப் போல இராது. இந்த ஆலயத்தின் பெயரையும் அது எங் குள்ளது என்பதனையும் கூறுங்கள் பார்க்கலாம்.



(2) இந்தப்புனிதமான சிவன் கோவில் கடல் மட்டத்திற்கு 13,000 அடிக்கும் மேலுள்ள இடத்தில் உள்ளது. பனி படர்ந்த பகுதியிலுள்ள கோவி லின் சிவலிங்கமும் பனியால் உருவானதே. அது சந்திரன் வளரும் வளர்பிறையின் போது வளர்ந்து தேய் பிறை யின் போது குறையும். இந்தக் கோவில் எங்கே உள்ளது?











(3) இடது புறமுள்ள எழுத் துக்கள் சிந்து நதிப்பள்ளத் தாக்குப் பண்பாடு உயர்ந் திருந்த காலத்தைச் சார்ந் தவை. இவற்றின் பொருள் என்ன என்று இதுவரை தெரியவில்லை. வலது புறமுள்ள எழுத்துக்களுக் கும் இநத எழுத்துக்களுக் கும் பல ஒற்றுமைகள் தென்படுகின்றன. இந்த எழுத்துக்களை யார் பயன்படுத்தினார்கள்?











 

# டிசைனை ஸ்டென்சில் செய்யுங்கள்




**காகிதம், துணி, டீஷர்ட், குஷன் உறைகள் ஆகியவற்றின் மீது நீங்கள் விரும்பும் டிசைன்களை ஸ்டென்சில் செய்ய நீங்கள் கற்கலாம் . இது மிக எளிது.**



1. தடிமனான காகிதம் அல்லது ப்ளாஸ்டிக் ஷீட் எடுத்துக் கொள்ளவும். அதன் மீது நீங்கள் விரும்பும் டிசைனையோ உருவையோ டிரேஸ் செய்யவும். இதற்கு எளிய பெரிய டிசைன்களைத் தேர்ந்தெடுப்பது நல்லது.

2. பிறகு அந்த டிசைனை கவனமாகக் கத்திரியுங்கள். இப்போது உங்கள் ஸ்டென்சில் தயார்.

3. வண்ணங்களைக் குழைத்துக் கொள்ளுங்கள். கத்திரித்த டிசைனை வெள்ளை அல்லது வண்ண ட்ராயிங் பேப்பர் மீது வைக்கவும் அது நகர முடியாமல் செய்து அதன் மீது வண்ணம் பூசுங்கள். இதற்கு உறுதி யான பிரஷ் அல்லது காட்டன் உல் பயன் படுத்தலாம்.



4. டிசைனை எடுத்து அதைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு ஒரு குறிப்பிட்ட முறையில் உருவம் கிடைக் கும் விதத்தில் முன் செய்தது போல மீண்டும் மீண்டும் வண்ணம் கொடுக்க வேண்டும்.

5. துணி மீதோ ஜெர்ஸிப் பொருள்கள் மீதோ ஸ்டென்சில் செய்ய துணி களுக்குப் பயன்படுத்தப் படும் பேப்ரிக் பெயிண்டை உபயோகிக்க வேண்டும். துணியை சுருக்கம் விழாமல் விறைப்பாக இருக்கும்படி வைப்பது மிகவும் முக்கியம். அதற்காகத் துணியை ஒரு கெட்டியான அட்டை மீது 'பின்' செய்து கொள்வது நல்லது.

### படத்தைப் பெரியதாகச் செய்யுங்கள்

சிறிய படத்தைப் பெரிதாக்குவது எப்படியா? இதைப் படியுங்கள்.



1. ரூல் தடியையும் பென்சிலையும் எடுத்துக்கொள்ளுங்கள் நீங்கள் பெரிதாக்க விரும்பும் படத்தின் மீது 1. செ.மீ. அளவு கட்டங்களை வரையுங்கள்.

2. ஒரு டிராயிங்க் பேப்பர் மீது 2செ.மீ. அளவில் மேலுள்ளதை விடப் பெரிய கட்டங்கள் வரையுங்கள்.

3. இப்போது மேலேயுல்ல படத் தைப் பார்த்து கவனமாகக் கோடு களை வரைந்தால் படம் இரு மடங்கு பெரிதாகிவிடும்.



## பெங்க்வின் கட்அவுட் செய்யலாம்!

1. கெட்டியான அட்டை மீது பெங்க்வின் படத்தை வரையுங்கள். அல்லது முன் கூறிய முறையில் பக்கத்தில் கொடுக்கப்பட்ட படததைப் பெரிதாக்குங்கள்.
2. படத்தை சிவப்புக் கோடுகள் வழியாகக் கத்திரிக்கவும்.
3. புள்ளிக் கோடுகளின் மீது மடித்து கழுத்துப் பக்கம் உட்புறமாக மடியுங்கள். இறக்கைகளை மடியுங்கள். கால்களை வெளிப்புறம் எடுங் கள். இப்போது உங்கள்பெங்க்வின் கட்அவுட் தயார்!



## மூன்று எளிய முறைகளில் ஒட்டகப்படம் வரையுங்கள்



## பொன்மயமான பொழுதுகள் - 7

### பதில்கள்:



1. கோல் கும்பஜ். இது பீஜப்பூரை ஆண்ட ஆதில் ஷாஹி வம்சத்தின் ஏழாவது சுல்தான் மகம்மது ஆதில் ஷாவின் சமாதி இது உலகிலேயே மிகப் பெரிதான இரண்டாவது சமாதி.

2. ஜாடிங்கா, அஸ்ஸாம்.

3. இது பஹயா மதத்தவரின் பிரார்த்தனை மண்டபம். 19வது நூற்றாண்டில் பஹ உல்லா இந்த மதத்தை நிறுவினார்.



४. डैनोजार । हाथी में बदल गया ।



**தாறுமாறாக இருந்தவை**

சரியானவரிசை: 1, 8, 4, 5, 6, 2, 10, 7, 9, (அ) 3.




அனுமார் வாழைத் தோட்டத்தில் படுத்துக் கிடந்தார். அவரது சிவந்த கன்னங்களும், பச்சை நிறக் கண்களும், பொன் நிறமேனியும் யாவரையும் பயப்படவே செய்யும். ஆனால் பீமன் பயப்படவில்லை. அவன் அனுமாரின் முன் நின்று சிங்கம் போல கர்ஜித்தான்.

அனுமார் கண் திறந்து பீமனைப் பார்த்துப் புன்னகை புரிந்து ''தம்பீ! நானோ கிழவன். நகரக் கூட முடியாமல் களைத்துப் படுத்து கிடக்கிறேன். தூங்கிக் கொண்டிருந்த என்னைக் கூச்சல் போட்டு ஏன் எழுப்பினாய்? என் போன்ற பிராணிகளிடம் உன் போன்ற மனிதர்கள் கொஞ்சம் இரக்கம் காட்டக் கூடாதா? உனக்குக் கூட வயதானவர்களிடம் மரியாதையாக நடந்து கொள்ள வேண்டுமென்பது தெரியாதா? நீ தனியாக இங்கு ஏன் வந்தாய்? இது தேவர்கள் நடமாடும் பகுதி. மனிதர்கள் வரக் கூடாது. அதனால் வந்த வழியே திரும்பிப் போய் விடு'' என்றார்.

பீமனோ ''நான் க்ஷத்திரியன். குரு வம்சத்தில் பிறந்தவன். என் பெயர் பீமன். நீ யார்? நீ ஏன் இங்கு இருக்கிறாய்? உனக்கு இந்த குரங்கின் உருவம் எப்படி வந்தது? என் வழியை விட்டு விலகு'' என்றான். அனுமாரும் ''நான் ஒரு வானரன். நீ பிடிவாதம் பிடிக்காமல் வந்த வழியே போய் விடு'' என்றார். பீமனோ ''எனக்கு வழிவிட வேண்டும் என்று கேட்பது பிடிவாதம் பிடிப்பதா?'' என்று கேட்கவே அனுமாரும் ''நீ என்னை நகரச் சொல்வதைத்தான் அப்படிக் குறிப்பிட்டேன். வேண்டுமானால் குதித்து என் உடலைத் தாண்டிப் போ. நான் ஒன்றும் சொல்ல மாட்டேன்'' என்றார்

பீமனும் ''ஒருவரைத் தாண்டிச் செல்வது தவறு. அனுமார் கடலைத்

— சௌகந்திக மலர் கொண்டு வருதல் —



என்றான்.

அனுமார் பீமனின் கர்வத்தைக் கண்டு சிரித்து ''தம்பீ! எனக்குத் தொந் தரவு கொடுக்காதே. உன் வழியில் என் வால் தான் இருக்கிறது. அதை வேண்டுமானால் நகர்த்தி விட்டு நீ போ'' என்றார். அதைக் கேட்ட பீமன் அலட்சியமாக அவரைப் பார்த்த வாறே அவரது வாலைத் தூக்க முயன்றான். ஆனால் அதை இம்மி அளவு கூட நகர்த்த முடியவில்லை. அது கண்டு ஆச்சரியப்பட்டு தன் முழு பலம் கொண்டு இரண்டு கைகளா லும் அதைத் தூக்க முயன்றான். அது வும் அவனால் முடியவில்லை.

பீமன் வெட்கப்பட்டான். தன் முன் இருப்பவர் சாதாரணப் பட்டவர் அல்ல எனத்தெரிந்து கொண்ட அவன் அவரைக் கைகூப்பி வணங்கி ''ஐயா, நான் கர்வம் கொண்டு உங்களை ஏதேதோ பேசிவிட்டேன். நீங்கள் யாரோ ஒரு தேவனாகத்தான் இருக்க வேண்டும். சாதாரண வானரம் அல்ல. நீங்கள் யாரென்பதை எனக்குக் கூற முடியுமா?'' என்று கேட்டார்.

தாண்டிச்சென்றது போல என்னாலும் முடியும் என்றாலும் நான் அவ்வாறு செய்ய மாட்டேன்'' என்றான். அப் போது அனுமார் ''நீ கூறும் அந்த அனு மார் யார்? அவர் எதற்காகக் கடலைத் தாண்டினார்?'' என்று ஒன்றும் தெரி யாதவர் போலக் கேட்டார்.

பீமனும் ''என் போல அந்த அனு மாரும் வாயுதேவனின் புதல்வரே. அவர் எனக்குத் தமையன் முறையா கிறார். மிக உயர்ந்தவர். இராம பிரானின் மனைவியை இலங்கை மன்னன் கவர்ந்து செல்லவே அனு மார் அவரைத் தேடிக் கொண்டு கடலைத் தாண்டி இலங்கைக்குச் சென்றார். எனக்கும் அனுமாரின்பலம் உள்ளது. அதனால் மரியாதையாக எனக்கு வழி விட்டுவிடு. இல்லா விட்டால் என்னிடம் அடிபடுவாய்''

அதற்கு அனுமாரும் ''தம்பீ! நீ வர்ணித்த அனுமார் நான்தான். வாலிக் கும் சுக்கிரீவனுக்கும் சண்டை ஏற் பட்ட போது சுக்கிரீவன் என் உத வியை நாடி வந்தான்'' என்று ஆரம் பித்து இராமாயணக் கதை முழுவதை யும் அவனுக்குக் கூறினார். பிறகு அவர்கள் ''இங்கு தினமும் யட்சர் களும் கந்தர்வர்களும் ராமகானம் செய்கிறார்கள். அதைக் கேட்டு மகிழ் கிறேன். இங்கு மனிதர்கள் வரவே கூடாது. நீ ஏன் இங்கு வந்தாய்?'' என்று கேட்டார்.

பீமனும் அவரை விழுந்து வணங்கி ''அண்ணா! நீங்கள் கடலைத் தாண்ட எடுத்த மாபெரும் உருவை இப்போது நான் பார்க்கலாமா?'' எனக் கேட்டான். அனுமாரும் ''அது அந்தக் காலத்தில் நடந்த நிகழ்ச்சி. இப்போது அது எதற்கு?'' என்றார். ஆனாலும் பீமன் விடாது வேண்டவே அனுமார் தன் உருவைப் பெரிதாக்கிக் காட்டினார். அவரது தலை ஆகாயத்தைத் தொட்டுக் கொண்டிருந்தது. கால்கள் பாதாளம் வரை போயின. கண்கள் நெருப்புத் தணல் போலப் ஒளி விட்டன. பற்கள் நீண்டு கோரைப் பற்கள் போல பயங்கரமாக இருந்தன. வாலோ பருமனாய் நீண்டு முடிவு எங்கே என்று தெரியாமல் இருந்தது. அனுமாரின் இப்படிப்பட்ட உருவைக்கண்டபின் பீமன் ''ஆகா! என்ன ஒளிமயமான பயங்கர உருவம்! கண் கூசுகிறதே. தயவு செய்து முன் போலாகி விடுங்கள்'' என்று வேண்டினான். அனுமாரும் எப்போதும் இருப்பவர் போலகி விட்டார். அப்போது பீமன் தான் செளகந்திக மலருக்காக வந்திருப்பதாகக் கூறவே அவரும் ''இப்படியே நேராகப் போனால் செளகந்திக வனத்தை அடைவாய். உனக்கு ஏதாவது கஷ்டம் ஏற்பட்டால் என்னை நினை. ஏனெனில் அந்த மலர்களைக் கொய்தால் தேவர்கள் கோபமடைவார்கள்'' என்று கூறி அவனை அனுப்பினார்.

பீமன் உற்சாகத்துடன் மலைவழியில் சென்று ஒரு நதிக்கரையிலுள்ள செளகந்திக வனத்தை அடைந்தான். அங்கு பலவித செளகந்திக மலர்கள் பூத்து தொங்குவதைக் கண்டான்.



அவற்றின் நறுமணம் அப்பகுதி முழுவதும் பரவியிருந்தது. அவன் அம்மலர்களைப் பறிக்கப் போன போது பல ராட்சஸர்கள் பயங்கரமாகக் கத்திக் கொண்டு ஓடி வந்தார்கள். அவர்கள் பீமனைப் பார்த்து ''யாரப்பா நீ? இங்கே வழி தவறி வந்து விட்டாயா?'' என்று கேட்டார்கள்.

பீமனும் ''நான் பீமன். குரு வம்சத்தில் பிறந்தவன். பாண்டவர்களில் ஒருவன். இந்த மலருக்காகத்தான் இங்கு வந்திருக்கிறேன். வழி தவறி ஒன்றும் நான் வந்து விடவில்லை'' என்றான் அப்போது அவர்கள் ''இது குபேரனுக்குச் சொந்தமான வனம். இங்கு மனிதர்கள் வரக்கூடாது. வேண்டுமானால் குபேரனின் அனுமதி பெற்று எவ்வளவு மலர்களை வேண்டுமானாலும் பறித்துக் கொண்டு போ''



என்றார்கள்.

பீமனோ ''அவர் எங்கே இருக்கிறாரோ? எப்போது போய் நான் அனுமதி பெற்று மலர்களைப் பறிப்பதோ? இதற்குக் காலத்தாமதம் ஆகுமே. நான் பறிக்கப் போவது நாலைந்து மலர்கள் தானே! பறித்துக் கொண்டுபோய் விடுகிறேன்'' என்றான். அவர்களோ முடியாது எனக் கூறவே பீமனும் ''நான் க்ஷத்திரியன். ஒரு பொருளை நான் அடைய வேண்டுமென்று நினைத்தால் என் பலத்தைக் காட்டியாவது அதை அடைந்தே தீருவேன். இதற்காக நான் யாரிடமும் போய் அனுமதி கேட்க மாட்டேன்'' எனக் கூறி மலர்களைப் பறிக்க முற்பட்டான்.

அதைக்கண்டு அந்த ராட்சஸர்கள் பீமனின் மீது பாய்ந்தார்கள். பீமனோ தன் கதையைச் சுழற்றி அவர்களை அடிக்கலானான். கதையின் அடிகளைத் தாங்க முடியாமல் சிலர் இறந்தார்கள். சிலர் பயந்து ஓடிப் போய் குபேரனிடம் நடந்ததைக் கூறினார்கள். குபேரன் அவர்களிடம் ''பீமன் மலர்களைப் பறித்துக் கொண்டு போகட்டும் நீங்கள் அவனைத் தடுக்க வேண்டாம்'' என்று கூறி அனுப்பினான். அவர்கள் திரும்பி வந்து பார்த்த போது பீமன் எவ்வளவோ மலர்களைப் பறித்து விட்டான்!

இதே சமயம் தருமர் பீமனைக் காணாததால் துரௌபதியிடம் ''பீமன் கண்ணிலேயே படவில்லையே. அவனை யாராவது எங்கே யாவது அனுப்பி இருக்கிறாரா?'' என்று கேட்டார். துரௌபதியும் ''அவர் சௌகந்திக மலரைக் கொண்டு வருவதாகக் கூறிவிட்டுப் போனார்'' என்றாள். அப்போது கடோத்கசன் தன் கூட்டத்தினருடன் அங்கு வந்தான். யாவரும் பீமனிருக்கும் இடத்திற்குப் போக வேண்டும் என்று விருப்பம் தெரிவிக்கவே கடோத்கசனும் அவனது ஆட்களும் பாண்டவர்களையும் துரௌபதியையும் மற்றும் அங்கிருந்தவர்களையும் தம் தோள்களின் மீது ஏற்றிக் கொண்டு பீமனிருக்கும் இடத்திற்குக் கொண்டு போய் விட்டார்கள்.

பீமனும் துரௌபதியிடம் சௌகந்திக மலர்களைக் கொடுத்தான். பாண்டவர்கள் குபேரனின் அனுமதி பெற்று அர்ஜுனன் திரும்பி வரும் வரை கந்த மாதனப் பர்வதத்தில் தங்கி இருக்க அனுமதி பெற்றார்கள். அவர்களை எல்லாம் மீண்டும் நரநாராயண ஆசிரமத்தில் கடோத்கசன்



சேர்த்து விட்டுத் தன் ஆட்களுடன் எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டு சென்றான்.

ஒரு நாள் ஜடாசுரன் என்ற ராட்சஸன் துரௌபதியைக் கவர்ந்து செல்ல வேண்டும் என்ற கெட்ட எண்ணத்தோடு பாண்டவர்கள் இருக்கும் இடத்திற்கு வந்தான். அவன் ஒரு அந்தணனாக மாறி தருமரைக் கண்டு ''நான் பரசுராமனின் சீடன். வேத சாஸ்திரங்களையும் அஸ்திர வித்தையையும் அவரிடம் கற்றவன். நான் தங்களுடன் சிறிது காலம் இருக்க விரும்புகிறேன்'' என்றான். தருமரும் தம் இயல்பிற்கு ஏற்ப அவன் சொன்னதை அப்படியே நம்பி தம்மோடு தங்கி இருக்க அவனுக்கு அனுமதி அளித்தார்.

ஒரு நாள் பீமன் வேட்டையாடப் போயிருந்தான். ரோமசர், சௌம்யர் மற்றும் அங்கிருந்த முனிவர்கள் யாவரும் காலைக் கடன்களை முடித்துக் குளித்து விட்டு வர சற்று தூரத்திலுள்ள ஆற்றிற்குச் சென்றிருந்தார்கள். இச் சமயம் பார்த்து ஜடாசுரன் பாண்டவர்களின் ஆயுதங்களை எல்லாம் எடுத்து ஓரிடத்தில் ஒளித்து வைத்துவிட்டு மூன்று பாண்டவர்களையும் துரௌபதியையும் தூக்கிக் கொண்டு ஓடினான். அப்போது சகாதேவன் அவனது தோளிலிருந்து கீழே நழுவி விழுந்து பாண்டவர்களின் ஆயுதங்கள் ஒளித்து வைக்கப்பட்ட இடத்தைக் கண்டு விட்டான். அவன் ஒரு கத்தியை எடுத்துக் கொண்டு ஜடாசுரனைத் தாக்கியவாறே ''பீமண்ணா! ஓடி வாருங்கள்! காப்பாற்றுங்கள்'' என்று உரக்கக் கூவினான்.

தருமரோ அந்த ராட்சஸனிடம் ''உன்னை நல்லவன் என்று நினைத்துத்தானே எங்களோடு இருக்க அனுமதித்தேன். இப்படி துரோகம் செய்யலாமா? எங்களை விட்டு விடு. உனக்குப் புண்ணியம் உண்டு'' என அறிவுரைகளைக் கூறலானார். அப்போது சகதேவன் ''அண்ணா! அவனுக்கெல்லாம் அறிவுரை கூறினால் மண்டையில் ஏறாது. ஒன்று இவனை நாம் கொல்ல வேண்டும் அல்லது இவன் கையால் நாம் மடிய வேண்டும்'' என்று கூறி ராட்சஸனை மேலும் பலமாகத் தாக்கினான்.

இதற்குள் சகதேவனின் குரலைக் கேட்ட பீமன் ஓடோடி வந்தான். பீமனைக் கண்டதும் ஜடாசுரன் தருமரையும் நகுலனையும் துரௌபதியையும் கீழே இறக்கி விட்டுவிட்டு

பீமனுடன்பயங்கரமாகச் சண்டை போடலானான். பீமன்அவனோடு சண்டை போட்டு அவனைக் களைப் படையச் செய்தான். பிறகு அவன் அந்த ராட்சஸனை உயர்த் தூக்கி ''கிர் கிர்'' ரென்று சுற்றித் தரை மீது ஓங்கி அடித்தான். அவ்வளவுதான் அவன் ஓவேன அலறி உயிர் விட்டான்.

எல்லோரும் ஆசிரமத்திற்குத் திரும்பிவந்தார்கள். அர்ஜுனன்வராத தால் மேலும் பல ஆசிரமங்களை பார்த்தவாறே சென்று கொண்டிருந் தார்கள். ஒருநாள்பாண்டவர்கள்நால் வரும் ஓரிடத்தில் அமர்ந்து பேசிக் கொண்டிருக்கையில் தேவலோக விமானம் அவர்களருகே வந்து நின்றது. அதிலிருந்து அர்ஜுனன் இறங்கி வந்தான். தேவலோகத்தி லிருந்து வந்த அவன் யாவரையும் வணங்கி நின்றான். விமானத்தைச் செலுத்தி வந்த இந்திரனின் விமான ஓட்டி மாதலி அவர்களை வணங்கி அவர்களது உபசரிப்புகளை ஏற்றுக் கொண்ட பின் விமானத்தை ஓட்டிக் கொண்டு தேவலோகத்திற்குத் திரும் பிச் சென்றான்.

இந்திரன் பல திவ்விய அஸ்திரங் களை அர்ஜுனனுக்குக் கொடுத்தி ருந்தான். அவற்றையெல்லாம் அர் ஜுனன் தருமரிடம் காட்டி அவை பற்றி விவரமாகக் கூறினான். தேவர் களை துன்புறுத்தி வந்த பௌலோமி யர்களையும் காலகேயர்களையும் கொன்று எப்படி தான் இந்திரனுக்கு உதவினான் என்பதை தருமருக்கும் மற்றவருக்கும்விவரித்துக்கூறினான். இதனால் மகிழ்ந்தே தேவேந்திரன் அந்த திவ்விய அஸ்திரங்களைத் தனக் குக் கொடுத்ததாக அவன் கூறினான். அவன் தேவதத்தம் என்ற சங்கு தனக் குக் கொடுக்கப்பட்டதையும் கூறி அதனையும் எடுத்து அவர்களுக்குக் காட்டினான்.

அப்போது நாரதர் அங்கு வந்தார். அவர் அர்ஜுனனிடம் ''அர்ஜுனா! இந்த திவ்விய அஸ்திரங்களைத் தக்க காரணமில்லாமல் பயன்படுத்தக் கூடாது. எல்லா அஸ்திரங்களை உப யோகப்படுத்துவது போல இவற்றை யும் நீ உபயோகித்தால் பெரும் ஆபத்தே விளையும். போரில் இவற்றை நீ பயன்படுத்தும் போது நானே வந்து பார்க்கிறேன்'' என்று கூறிவிட்டுச் சென்றார்.



# அம்புலிமாமா செய்திகள்

## அமைதியை போதிக்க பல்கலைக் கழகம்!

ராணுவப் பயிற்சிப் பள்ளிகளும் கல்லூரிகளும் எதிரிகளை எப்படி எல்லாம் தாக்குவது என்று பயிற்சி அளித்துக் கற்றுக் கொடுக்கின்றன. ஆனால் இப்போது அண்டை நாடுகளுடன் போரிடாமல் சமாதானமாய் இருந்து சண்டைசச்சரவு இல்லாத வாழ்க்கையை எப்படி நடத்துவது என்று கற்பிக்கும் கல்வி நிலையங்களைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டது இல்லையே. இப்படிப்பட்ட கல்விக் கூடங்களை நிறுவ இப்போது நம் நாட்டில் முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன இதற்கு 'யுனைடெட் எர்த் பீஸ் யுனிவர்சிடி' என்று பெயரிட்டிருக்கிறார்கள். இது மகாராஷ்டிர மாநிலத்தில் புனேவுக்கருகே புகழ் பெற்ற ஞானி ஞானேஸ்வர் வசித்த இடமான அவண்டி கிராமத்தில் உருவாகப் போகிறது. இந்த மாத இறுதிக்குள் ஆரம்பிக்கப்படப் போகும் பல்கலைக் கழகம் 30 கோடி அமெரிக்கன் டாலர் செலவில் அமைக்கத் திட்டமிடப்பட்டுள்ளது.

## கவிதைச்சுவர்

சீனாவில் ஹுனான் மாநிலத்தில் சாங்க்டே நகரருகே வெள்ள அபாயத்திலிருந்து பாதுகாத்துக்கொள்ள 2.5 கி.மீ. நீளச் சுவரைக் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். இச்சுவர் வெள்ளத்தைத் தடுப்பதோடல்லாமல் வேறு வகையிலும் பயன்படுத்தப்படுமாம். சுவர் மீது கவிதைகளை எழுதி வைக்கப் போகிறார்கள் பழங்கால இக்காலக் கவிதைகள் 1000 அதன் மீது இடம் பெறுமாம். 1949லிருந்து 1976 வரை ஆட்சியிலிருந்த சீனத் தலைவர் மாஸேதுங் இந்த சாங்கிடே அருகில் பிறந்தவர். தற்கால சீனக் கவிஞர்களில் தலை சிறந்தவராகக் கூறப்படுபவர் மாஸேதுங் என குறிப்பிடவும் வேண்டும்.

## புகையில் இருந்து சக்தி!

நகரங்களில் குப்பை கூளங்களை எரிக்கும் போது புகை கிளம்புகிறதல்லவா? அதிலும் ஒரு வகை சக்தி உள்ளது. ஆனால் அதை இது நாள்வரை யாரும் பயன்படுத்தவில்லை. தாய்வானில் இச்சக்தியைப் பயன்படுத்த ஒரு வழி கண்டு பிடித்திருக்கிறார்கள். வைடோன் நகருக்கு வெளியே குப்பை கூளங்களை எரிக்கும் இடத்தில் ஒரு ஹோட்டல் கட்டப் போகிறார்கள். இது 150 அடி உயரப்புகைப் போக்கியைச் சுற்றி இரண்டுக்கு மாடிக் கட்டடமாக 120 உயரம் கொண்டிருக்கும். இது புகைப் போக்கியைச் சுற்றிவரும். இதில் ஒரே சமயத்தில் 120 பேர் அமர்ந்து சாப்பிடலாமாம். மேல் மாடித் தளத்தில் 12 பைனாகுலர்கள் வைக்கப்படுமாம். இக்கட்டடம் அந்தப் புகைப் போக்கியிலிருந்து வரும் புகையின் சக்தியைக் கொண்டு அந்தப் புகைப் போக்கியைச் சுற்றி வருமாம்.

## வீடுகளாக மாறும் குகைகள்

சீனாவில் சுமார் நாற்பது லட்சம்பேர்கள் மலைக்குகைகளில் வசிக்கிறார்கள். இவர்கள் இப்போது தம் குகைகளை விட்டு நகரங்களுக்குப் போய் வசிக்க ஆரம்பித்து விட்டார்கள். இப்படிக் காலியான குகைளில் நவீன வசதிகளைச் செய்து அவற்றை அழகிய வீடுகளாக மாற்றும் திட்டம் ஒன்றைச் சீன அரசாங்கமே மேற்கொண்டுள்ளது. புறாக்கூடு போலுள்ள அடுக்கு மாடிகளில் வசிப்பவர்களை இந்த வீடுகள் கவர்ந்து இழுக்கும் என அரசாங்கம் நம்புகிறது. வடமேற்குச் சீனாவிலுள்ள லோஸ் பீடபூமியிலுள்ள குகைகளை வீடுகளாக்கும் பணியில் பல தொழிலாளர்கள் அமர்த்தப்பட்டிருக்கிறார்கள். கான்ஸெ ஹேனான், ஷான்ஸி பகுதிகளிலுள்ள குகைகள் அழகிய வீடுகளாக மாற்றப்பட்டு விட்டனவாம். மின் சக்தியை குறைவாகச் செலவிட்டு இயற்கைச் சூழலைப் பாதுகாப்பதால் இவ்வீடுகள் உலகத்தவரின் கவனத்திற்கு வெகு விரைவில் வந்து விடும்.

அம்புலிமாமா
அனுபந்தம் - 98

நம் நாட்டு மரங்கள்

# தில்லெனியா இண்டிகா

இந்தத் தலைப்பைப் பார்த்ததுமே இது நம் நாட்டு மரம் அல்ல என்றும் வெளி நாட்டிலிருந்து நம் நாட்டிற்கு வந்தது எனத் தெரிந்து கொள்ளலாம். சில வகை மரங்கள் உலகின் பல இடங்களில் வளர்ந்து நம் நாட்டிற்கு வந்தவையாக உள்ளன. தலைப்பில் குறிப்பிட்டுள்ள மரம் நம் நாட்டின் வடபகுதியில் அதிகம் காணப்படுகிறது. தாவர இயலில் இம்மரம் தில்லெனியா இண்டிகா என்று குறிப்பிடப்படுகிறது.

ஹிந்தியில் இதை சல்த்தா என்றும், வங்காள மொழியில் சலீதா என்றும், ஒரியாவில் சலோதா என்றும், குஜராத்தில் காரம் பால் என்றும், மராத்தியில் கர்மால் என்றும் கூறுகிறார்கள். மேற்கு வங்காளம், பீகார், அஸ்ஸாம் ஆகிய மாநிலங்களில் இம்மரங்கள் ஏராளமாக வளர்கின்றன. மற்ற மாநிலங்களில் அங்கொன்றும் இங்கொன்றுமாய்த் தென்படுகின்றன.

உயர்ந்து வளரும் இம்மரத்தின் கிளைகள் உருண்டையாக குவிந்து இருக்கும். மரத்தின் பட்டை மெத்தெனப் பாளம் பாளமாக இருக்கும். இது 10லிருந்து 20 மீட்டர் உயரம் வரை வளரும். கிளைகள் நாலா பக்கத்திலும் பரவி இருக்கும். இதன் இலைகள் பச்சை நிறத்தில் பளபளக்கும். இவை கிளைகளின் ஓரங்களில் சேர்ந்து இருக்கும். கிளை நுனியில் மலர்கள் தனித்தனியாக மலரும். மரம் ஜூன், ஜூலை மாதங்களில் பூக்கும்.

இதன் காய்கள் 8 - 12 செ.மீ. அளவு பருமனானவை. மேல்தோல் தடிப்பாக இருக்கும். உள்ளே சதைப்பற்றுள் விதைகள் ஊர வரை விதை போல இருக்கும். நம் நாட்டின் மேற்குப் பகுதியில் தென்படும் ஒருவகை தில்லொனியா மரங்களின் இலைகள் வாழை இலை போலப் பெரிதாக இருக்கும்.



# பலாகி

நம் பண்டைக்காலத்து முனிவர்கள் எவ்வளவு கற்றறிந்திருந்தாலும் மேலும்மேலும் கற்று அறிய வேண்டு மென்ற அவா கொண்டவர்கள். எதற்கும் பணிவுடன் நடந்து கொள்ப வர்கள். ஆனால் பலாகி என்ற முனி குமாரன் இவ்வாறு இல்லாமல் தான் எல்லாவற்றையும் கற்றறிந்து விட்டதாகக் கர்வம் கொண்டு திரிந்தான்.

காசி மன்னர் நல்ல அறிவாளி என்றும் இன்னமும் கற்க விரும்புகிறார் என்று கேள்விப் பட்டு முனிகுமாரன் பலாகி அவனது அரண்மனைக்குச் சென்றான். அவனுக்குத் தான் கற்பிக்க வந்திருப்பதாக பலாகி கூறவே காசி மன்னனும் 'ஆகா! தாராளமாகக் கற்றுக் கொள்கிறேன். நீங்கள் என்னவெல்லாம் சொல்லிக் கொடுக்கப் போகிறீர்கள்?' என்று பணிவுடன் கூறினான்.

ஆனால் பலாகி எந்த மந்திரத்தைக் கூறி ஆரம்பித்தாலும் காசி மன்னன் அதை முழுவதும் கூறிவிட்டு இன்னமும் ஏதாவது இருந்தால கற்பியுங்கள் எனக் கேட்கலானான். தனக்குத் தெரிந்ததைவிட அம்மன்னன் அதிகம் தெரிந்து வைத்திருக்கிறான் எனத் தெரிந்து கொண்டான்.

ஒரு நாள் மன்னன் தூங்கும் முனிவரைக் காட்டி 'இவரது நிலை என்ன' என்று கேட்க பலாகி பதில் சொல்ல முடியாமல் திகைத்தான் மன்னனும் 'இந்த நிலையில் அவரது மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன உணர்ச்சி இழக்க அவரது ஆத்மா கடவுளை மிகவும் அருகே அணுகியுள்ளது. ஒருவன் விழித்திருக்கும் போது இந்நிலையில் இல்லை' என்றான். பலாகி அயர்ந்து போனான்!



# உங்களுக்குத் தெரியுமா?

1. 'கதாசரித் சாகரத்தை எழுதியவர் யார்?
2. டைனமைட்டிலுள்ள முக்கிய ரசாயனப் பொருள் எது?
3. ஹோமர், மில்டன், ஹெலன் கெல்லர், வேத் மேஹ்தா இவர்களுக்குள்ள ஒற்றுமை என்ன?
4. இந்திய அரசியல் சட்டத்தில் சொத்துரிமையை அடிப்படை உரிமைகளிலிருந்து நீக்கிய சட்டத் திருத்தம் எது?
5. 'பாரதி தாஸ்' என்ற புனைப் பெயரில் தம் படைப்புகளை அளித்து வரும் பிரபல அரசியல் தலைவர் யார்?
6. மெகாஸெஸ் விருதைப் பெற்ற முதலாவது இந்தியர் யார்?
7. அமைதிக்கான நோபல் பரிசு பெற்ற முதலாவது நிறுவனம் எது?
8. ஆண்டு தோறும் டிசம்பர் 10ல் நோபல் பரிசுகள் கொடுக்கப்படுகின்றன. இத்தேதியின் சிறப்பு என்ன?
9. 'லிபர்டி' சிலையை உருவாக்கியவர் யார்?
10. ஐக்கிய நாட்டு அமைப்பின் ஆட்சி மொழிகள் யாவை?
11. ஐக்கிய நாடுகள் அமைப்பின் பிரகடனம் எப்போது நடைமுறைக்கு வந்தது?
12. ஐ.நா. பாதுகாப்பு சபையின் நிரந்தர உறுப்பினராக தானிருக்க வேண்டும் என இந்தியா எப்போது கோரியது?
13. 'ரெவின்யூ ஸ்டாம்ப்' என்ற சுயசரிதத்தின் ஆசிரியர் யார்?
14. இந்தியாவில் ஆங்கிலத்தைத் தன் ஆட்சி மொழியாக அறிவித்த மாநிலம் எது?
15. நம் நாட்டில் முதன் முதலாக ஏற்பட்ட தேசிய நெடுஞ்சாலை எது?
16. வரப்போகும் 'உலகக் கிரிக்கெட் கோப்பை'க்கான போட்டி எந்நாட்டில் நடைக்கப் போகிறது?

## விடைகள்

1. சோம தேவர்.
2. நைட்ரோக்ளிஸரின்.
3. பார்வையற்ற புகழ் பெற்ற நூலாசிரியர்கள்.
4. 1978ல் கொண்டு வரப்பட்ட அரசியல் சட்ட 44வது திருத்தம்.
5. அடல் பிஹாரி வாஜ்பாய்.
6. ஆசாரிய விநோபா பாவே.
7. உலக நீதி மன்றம்.
8. உலக மனித உரிமை.
9. பிரெடரிக் அகஸ்டோ பார்த்தேதிரிட்
10. அராபிக், சீனம், ஆங்கிலம், பிரெஞ்சு, ரஷ்யா, ஸ்பானிஷ்.
11. 1945 அக்டோபர் 24.
12. 1994 அக்டோபர் 3.
13. அமிர்தா ப்ரீதம்.
14. நாகாலாந்து.
15. டில்லியிலிருந்து சண்டிகட் வரையான சாலை.
16. இங்கிலாந்து.

# அதிகார பலம்!

ஆறுமுகசாமி என்ற ஆசிரியர் முன்பின் தெரியாக ஒரு ஊரில் இரவில் ஒரு சத்திரத்திற்கு தங்குவதற்காகச் சென்றார். அங்கு ஒரு பக்கம் சிலர் சூதாடிக் கொண்டிருந்தார்கள். சிலர் மதுவைக் குடித்துக்கொண்டு தள்ளாடிக் கொண்டிருந்தார்கள். அது சத்திரம் மாதிரி இல்லாது ஏதோ திருடர்களும் சட்டத்திற்குப் பயந்து ஒளிந்து கொள்பவர்களின் இடம் போலிருக்கிறதே என்று ஆறுமுகசாமி தான் அங்கு வந்ததற்கு வருததப்பட்டுக் கொண்டிருந்தார்.

அப்போது ஒரு குரல் 'டேய், கார்கோடகன் வருகிறான். ஓடுங்கள், ஓடுங்கள்' என்று கூவியது. அதைக் கேட்டு சூதாடிக்கொண்டிருந்தவர்களும் குடித்துக்கொண்டிருந்தவர்களும் அங்கிருந்து பிண்புற வாயில் வழியாக ஓடலானார்கள். அப்போது வேறொரு வாயில் வழியாக வந்த முரடன் ஒருவன் கீழே விழுந்து ''தாகம்! தாகம்!! கொண்டு வா தண்ணீர்'' என்று ஆறுமுகசாமியை நோக்கிக் கத்தினான்.

ஆறுமுகசாமியும் அவனது கட்டுமஸ்தான உடலையும் முறுக்கு மீசையையும் கொடூரப் பார்வையையும் கண்டு ''ஓகோ! கார்க்கோடகரா? நீங்கள் வரப்போகிறதாக யாரோ குரல் கொடுத்தார்கள். அதனால் தான் எல்லோரும் பயந்து ஓடினார்களா? என்று கேட்டார். அதைக் கேட்டதும் விழுந்துகிடந்த அந்த முரடன் எழுந்து ''ஐயோ! கார்க்கோடகனா வரப் போகிறான்!'' என்று அலறியவாறே பின்வாசல் வழியே ஓடலானான்.

அப்போது ஒல்லியாய் குட்டையாயிருந்த ஒரு அதிகாரி பத்து காவல் வீரர்களோடு வந்தார். அவர் சுற்றிலும் பார்த்து ''நான் வருவதை அறிந்து பயல்கள் ஓடுகிறார்கள். அவர்களைத் துரத்திப் பிடியுங்கள்'' என்று கட்டளையிட்டார்.

ஆறுமுகசாமி அவரது உருவத்தைக் கண்டு அதிசயித்து ''எல்லாம் அதிகாரபலம்'' என எண்ணினான்.






# தன்னோடு பிறரையும் நினை!

முருகையயன் தன் ஊரிலிருந்து பக்கத்திலிருந்த நகருக்குக் கிளம்பவே அவன் மனைவி மூன்று இட்டிலிகளைக் கட்டிக் கொடுத்தாள். அவன் அதை எடுத்துக் கொண்டு குறுக்கு வழியில் போகக் காட்டு வழியே செல்லலானான். அப்போது திடீரென ஒரு இளைஞன் அவன் முன் குதித்து அவனை வழி மறித்தான்.

இளைஞனைப் பார்த்தால் அவனுக்குப் பெரிய மனிதன் வீட்டுப் பையன் போலத் தெரிந்தது. அவன் விலையுயர்ந்த ஆடைகளை அணிந்திருந்தாலும் அவை ஒரே அழுக்காக இருந்தன. முதலில் அவன் தனக்கு உண்ண ஏதாவது கொடுக்கும்படி முருகையயனிடம் கேட்டான். ஆனால் முருகையயன் தான் கொண்டு வந்திருந்த இட்டிலிப் பொட்டலத்தை எடுத்து மறைக்க முயன்றான். அப்போது அந்த இளைஞன் சட்டெனப் பார்த்து அதைப் பிடுங்கிப் பிரித்து அந்த இட்டிலிகள் மூன்றையும் சாப்பிட்டு விட்டான்.

இதைக் கண்டு முருகையயன் திகைத்துப் போனான். இட்டிலிகளைச் சாப்பிட்டு முடித்த பின் அந்த இளைஞன் ''நீ கமலபுரத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாயா? நான் அங்கிருந்து நகருக்கு கிளம்பியவன் வழி தவறி இந்தக் காட்டிற்குள் மூன்று நாட்களுக்கு முன் வந்தேன். இந்த மூன்று நாட்களாக எனக்குச் சாப்பிட எதுவும் கிடைக்கவில்லை. அதனால்தான் பட்டினியால் துடித்துக் கொண்டிருந்த நான் உன் உணவுப் பொட்டலத்தைக் கண்டதும் அதைப் பிடுங்கி சாப்பிட்டேன். என்னை நீ கமலாபுரத்தில் கொண்டு போய் விட்டு விடு. நான் அதன் ஜமீன்தாரரின் ஒரே மகன். ஊர் போனதும் என் தந்தையிடம் சொல்லிப் பரிசளிக்கச் சொல்கிறேன்'' என்றான். பரிசுக்கு ஆசைப்பட்டு முருகையயனும் அந்த இளைஞனைக்

—சிவனார் செல்வன்—



விட்டது. அவனுக்கு ஏதாவது உதவி செய்யலாமென்று போய்க் கொண்டிருக்கிறேன். நீயும் வருகிறாயா?'' என்று கேட்டான். முருகையயனோ தான் சொன்னதைக் கேட்டுக் கொள்ளாமல் வேறு ஏதோ பேசுவது கண்டு முகத்தைச் சுளித்தவாறே ''எனக்கு இப்போது வேறொரு முக்கியமானவேலை இருக்கிறது'' என்று கூறிவிட்டு முன் சென்றான்.

சற்று தூரம் போனதும் அவன் பள்ளி ஆசிரியர் அண்ணாமலையைக் கண்டான். அவரிடம் ''பார்த்தீர்களா நான் அணிந்திருக்கும் முத்து மாலையை! இதை ஜமீன்தாரர் பரிசாக எனக்கு அளித்தார்'' என்றான். அண்ணாமலையும் ஒப்புக்கு தலையை ஆட்டி ''நம் ஊர் பண்டிதர் அரசாங்க விருதும் பரிசும் பெற்று நேற்று ஊருக்கு வந்திருக்கிறாராம். அவரைப்பாராட்டப்போய் கொண்டிருக்கிறேன். நீயும் என்னோடு வா'' என்று அழைத்தார்.

இம்முறையும்தான் சொல்லியதை ஒருவர் அலட்சியப் படுத்தி வேறு ஏதோ பேசியது கண்டு முருகையனின் மனம் வேதனைப்பட்டது. அதனால் அவன் பள்ளி ஆசிரியரிடம் ''எனக்கு இப்போது ஒரு அவசர வேலை உள்ளது. நான் வரவில்லை'' என்று கூறிவிட்டு முன் சென்றான். சற்று தூரம் போனதும் அவன் எதிரே வந்த சோலையப்பன் அவனைக் கண்டு ''ஓ! கழுத்தில் முத்து மாலையா? உண்மையான முத்தா அல்லது போலியா? நீ விலை கொடுத்து வாங்கினாயா?'' என்ன விலை?'' என்று கேள்விகளாகக்

கமலாபுரத்திற்கு அழைத்துக் கொண்டு போய் விட்டான். ஜமீன்தாரும் முருகையயனைப் பாராட்டி முத்துமாலை ஒன்றைப் பரிசாகக் கொடுத்து அனுப்பினார்.

முருகையயனுக்கு அந்தப் பரிசு மிகப் பெரிது. அவன் அந்த மாலையைத் தன் கழுத்தில் அணிந்து கொண்டு தன் ஊருக்கு வந்தான். ஊர் எல்லையில் அவன் ஆறுமுகம் மிக வேகமாகச் சென்று கொண்டிருப்பதைக் கண்டு அவனைத் தன்னருகே அழைத்து ''பார்த்தாயா? இது ஜமீன்தாரர்எனக்குப்பரிசாகஅளித்தவிலையுயர்ந்த முத்து மாலை'' என்று பெருமை பொங்க கூறினான்.

ஆறுமுகமோ அதை லட்சியம் செய்யாமல் ''குப்பண்ணனின் மகளுக்குக் கல்யாணம் நிச்சயமாகி

கேட்டுத் துளைத்தான்.

தான் அது பற்றிக் கூறுமுன்னே அது பற்றிக் கேள்விகளைக் கேட்ட சோலையப்பனை அவன் பாராட்டி ''இது அசல் முத்துமாலை. கமலா புரம் ஜமீன்தாரர் எனக்குப் பரிசளித்தது. இது போன்ற மாலையை விலை கொடுத்து வாங்கும் சக்தி எனக்கு ஏது? அவர் பரிசளித்தார். நான் போட்டுக் கொண்டேன்'' என்றான்.

சோலையப்பன் மாலையைப் பற்றி மேற்கொண்டு எதுவும் கேட்காமல் ''முருகைய்யா! கேட்டாயா சேதியை? நம் ஊர் பெரியசாமி நிலத்தில் கிணறு வெட்ட வெட்ட இவ்வளவு நாட்களாகத் தண்ணீர் வரவில்லை. இன்று காலை வெட்டிய போது ஊற்று பீரிட்டு வந்து பாதிக் கிணறுக்குத் தண்ணீர் இருக்கிறதாம். அதை நேரில் பார்த்து பெரியசாமியிடம் என் மகிழ்ச்சியையும் தெரிவிக்கப் போய்க் கொண்டிருக்கிறேன். வா நீயும்'' என்றான்.

முருகைய்யனுக்கு ஆத்திரம் வந்தது. தான்முத்து மாலைப் பரிசுபெற்று வந்ததற்குப் பாராட்டாமல் சோலையப்பனுக்கோ யாருடைய கிணற்றிலோ தண்ணீர் வந்ததற்கு மகிழ்ச்சியாம்! இவனெல்லாம் என்ன மனிதன் என்று எண்ணியவாறே அவன் தன் வீட்டை அடைந்தான்.

அவன் வீட்டிற்குப் போனதும் அவன் மனைவி கழுத்தில் முத்து மாலை இருப்பதைக் கண்டு ''ஆகா! என் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம் வெகு நாட்களாகவே நான் முத்துமாலை அணிந்து கொள்ள வேண்டுமென்று ஆசைப்படடுக் கொண்டிருந்தேன்.



அது இன்று தான் நிறைவேறப் போகிறது'' என்று சிரித்துக் கொண்டே கூறினாள். அப்போது முருகைய்யன் ''இது எனக்கு ஜமீன்தாரர் பரிசளித்த மாலை. அதனால் இதை நான்தான் அணிந்து கொண்டிருப்பேன். உனக்குக் கொடுக்க மாட்டேன்'' என்றான்.

அதைக் கேட்டு முருகைய்யனின் மனைவி சிரித்துவிட்டு ''முத்து மாலையெல்லாம் பெண்கள்தான் அணிய வேண்டும் ஆண்கள் சாதாரணமாக அணிவதில்லை. நம் போன்றவர்களில் ஆண்கள் முத்துமாலை அணிந்தால் எல்லோரும் சிரிப்பார்கள்'' என்றாள். முருகைய்யனோ ''இது நான் செய்த அரிய செயலுக்காகப் பாராட்டி ஜமீன்தாரர் பரிசாக அளித்தது. இதை அணிவது எனக்குப்

பெருமை என்றான்.

அவனது மனைவியும் ''ஐயோ! அப்படி என்ன அரிய செயலைச் செய்து சாதனை புரிந்தீர்களாம்?'' என்று கேட்கவே முருகையனும் காட்டில் நடந்ததை விவரமாகக் கூறினான். அதைக் கேட்ட அவன் மனைவி ''பூ இதுதானா அரிய செயல்? நீங்களாக இட்டிலிகளைக் கொடுக்கவில்லை. ஜமீன்தாரரின் மகனே அவற்றை உங்களிடமிருந்து பிடுங்கிச் சாப்பிட்டான். நிறையப் பரிசு ஜமீன்தாரரிடம் கிடைக்கும் என எண்ணியே அவரை அவரது ஊரில் கொண்டு போய்ச் சேர்த்தீர்கள். இதில் உங்கள் சாமர்த்தியம் என்ன உள்ளது? பார்க்கப் போனால் பரிசு எனக்குத்தான் கிடைத்தாகக் கருத வேண்டும். நான் இட்டிலிகளைக் கட்டிக் கொடுத்ததால்தானே அவற்றால் இது கிடைத்தது?'' என்றாள்.

அப்போது முருகையன் ''எல்லாம் அவரவர்கள் சுயநலமே கருதுகிறார்களேயாழிய மற்றவர்களைப் பற்றி யார் கவலைப்படுகிறார்கள்?'' என்றான். அதற்கு அவன் மனைவி ''ஊராரைப் பற்றி ஏன் குறை கூறுகிறீர்கள்? உங்கள் முத்துமாலை பற்றி யாரும் விசாரிக்கவில்லை என்ற குறைதானே உங்களுக்கு'' என்று கேட்டாள். முருகையனும் ''அந்த ஆறுமுகமும், ஆசிரியர் அண்ணாமலையும் சோலையப்பனும் இது எப்படிக் கிடைத்தது என்று கேட்கக் கூட வில்லையே. ஆறுமுகம் குப்பண்ணாவின் மகள் கல்யாணத்திற்கு உதவ போகிறானாம்! ஆசிரியர் இவ்வூர் பண்டிதருக்கு அரசாங்க விருது கிடைத்ததால் பாராட்டுவதற்குப் போகிறாராம்! சோலையப்பனோ யார் கிணற்றிலோ தண்ணீர் ஊறியதற்காக மகிழ்ச்சி தெரிவிக்கப் போகிறான். இவர்களுக்கெல்லாம் என்னைப் பற்றி நினைக்கக் கூட நேரமில்லை பார்'' என்று அங்கலா



ய்த்துக் கொண்டான்.

அப்போது அவன் மனைவி ''நீங்கள் தான் வடிகட்டின சுயநலக்காரர். வழியில் நீங்கள் மூன்று பேர்களைச் சந்தித்தீர்களே. அவர்கள் மூவரும் தங்களுக்கு ஏதேனும் லாபம் கிடைக்கிறது என்றா போனார்கள்? இல்லையே. பிறர் மகிழும் போது தாமும் அதில் கலந்து கொள்ளப் போனார்கள். நீங்களோ பசியால் துடித்தவனுக்கு உங்களிடமிருந்த உணவைக் கொடுக்கவில்லை. ஆனால் ஜமீன்தாரனின் மகனை அவனது ஊரில் கொண்டு போய் விட்டால் பரிசு கிடைக்கும் என்று ஆசைப் பட்டுத்தானே போனீர்கள். இது சுயநலம்தானே! அடுத்து நீங்கள் திரும்பி இவ்வூருக்கு வந்த போது உங்களைப் பார்த்தவர்களெல்லாம் உங்கள் முத்துமாலையைப் பற்றி விசாரித்து உங்களைப் பாராட்ட வேண்டுமென எண்ணினீர்கள். இது சுயநலம் தானே. இவ்வூரில் மூன்று பேர்களுக்கு நல்லது நடந்திருக்கிறது என்று கேட்டும் நீங்கள் போகாமல் இருப்பதுவும் சுயநலம்தானே. இப்படிப்பட்ட உங்களை யார்தான் பாராட்டுவார்?'' என்று கேட்டாள்.

அதைக் கேட்டு முருகையன் திகைத்துப் போனான். அப்போது அவன் மனைவி விடாமல் தொடர்ந்து நீங்கள் அணிந்து வந்த மாலையை எனக்குக் கொடுக்கும்படி நான் கேட்டும்கூட நீங்கள் முடியாது எனக்கூறியதும் உங்கள் சுயநலத்தைத் தானே காட்டுகிறது? என்றாள்.

முருகையன் உடனே தன் கழுத்திலிருந்த மாலையைக் கழற்றித் தன் மனைவியிடம் கொடுத்து ''இதை நீயே அணிந்து கொள். நான் இப்போதே போய் குப்பண்ணனைப் பார்த்து அவனது மகளின் திருமணத்திற்கு என்னாலான உதவியைச் செய்வதாகக் கூறுகிறேன். பண்டிதரைப் பார்த்துப் பாராட்டி விட்டும் பெரிய சாமி வெட்டிய கிணற்றில் தண்ணீர் வந்ததற்கு மகிழ்ச்சி அடைவதாகவும் கூறி வருகிறேன்'' என்று சொல்லி விட்டுப் போனான்.

அன்று முதல் முருகையன் தன்னைப் பற்றி மட்டும் நினைக்காமல் பிறரது சுக துக்கங்களிலும் பங்கு கொண்டு ஊரில் எல்லோருடைய மதிப்பையும் பெற்றான்.





# இரவல் வாங்கினால்...!

உமாவின் தந்தை சபாபதி ஏழைப்பட்டவர். அவர் தன் மனைவியை இழந்த பின் தன் மகளை சிரமப்பட்டு வளர்த்து வந்தார். உமா மிகமிக அழகானவள். அவளது அழகை ஊரில் எல்லோரும் புகழ்ந்தார்கள். அவளும் கண்ணாடியில் தன் அழகை ஒரு நாளைக்குக் குறைந்தது மூன்று தடவைகளாவது பார்த்து அகமகிழ்ந்து வந்தாள். அது மட்டுமல்ல தன்னை மணக்க எந்த லட்சாதிபதியின் மகனோ அல்லது ஜமீன்தாரரின்மகனோ வருவான் என்றும் தான் அவனோடு மாளிகையில் ஆடம்பரமாக வாழப் போவதாகவும் எண்ணி அவள் பெருமைப்பட்டுக் கொண்டிருந்தாள்.

ஆனால் அவளை மணக்க எந்த லட்சாதிபதியின் மகனும் வரவில்லை. ஜமீன்தாரரின் மகனும் எட்டிப்பார்க்கவில்லை. சபாபதி அழைத்து வந்து தன் பெண்ணைக் காட்டிய இளைஞர்களெல்லாம் நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் வரதட்சணையாக நிறைய எதிர்பார்த்தார்கள். சபாபதி தன்னால் அவ்வளவு பணம் கொடுக்க முடியாது என்று கூறி அவர்களை அனுப்பி வந்தான்.

இந்த நிலையில் கண்ணன் என்ற வாலிபன் வரதட்சணை எதுவும் எதிர்பாராமல் உமாவை மணந்து கொள்வதாக முன் வந்தான். சபாபதி தன்னால் எளிய முறையில்தான் கல்யாணம் நடத்திக் கொடுக்க முடியும் எனவே அதற்கும் அவன் சம்மதித்தான். ஊரார் எல்லோரும் உமா அதிர்ஷ்டசாலி என்று புகழ்ந்தார்கள். ஆனால் உமாவுக்கு இந்த மணம் பிடிக்கவில்லை. ஏனெனில் அவள் கட்டி இருந்த மனக் கோட்டைகளெல்லாம் தவிடு பொடியாகி விட்டனவே. ஆனால் அந்தத் திருமணம் நடந்தே விட்டது.

உமா கண்ணனுடன் குடித்தனம் செய்ய நகருக்கு வந்தாள். கண்ண

—சங்கர சுவாமிநாதன்—

னுக்கு ஒரு சிறு வீடு இருந்தது. சாப்பாட்டிற்கு எந்தக் குறையும் இல்லை. அவன் உமாவை அன்புடன் நடத்திய போதிலும் அவள்தான் தனக்குப் பட்டுப்புடவை இல்லயே, தங்க நகைகள் இல்லையே என்று ஏங்கிக் கொண்டிருந்தாள்.

ஒரு முறை கண்ணனின் உறவினர் ஒருவர் அவனைத் தன் வீட்டுக் கல்யாணத்திற்கு அழைத்தார். அவர் கண்ணனுக்கு எவ்வளவோ உதவிகளைச் செய்தவர். அதனால் அவர் வீட்டுக் கல்யாணத்திற்கு அவன் போயே தீர வேண்டும். அவன் உமாவிடம் அக்கல்யாணத்திற்கு அவளும் தன்னுடன் வரவேண்டும் என்று சொன்ன போது சிணுங்கினாள். ''நான் எப்படி வருவேன்? கட்டிக் கொள்ள ஒரு பட்டுப் புடவை கூட இல்லை. போட்டுக்கொள்ள ஒருதங்க நகைகூட இல்லை. இப்படியே மூளிக் கழுத்தாகப் போய் நின்றால் எல்லோரும் சிரிப்பார்கள்'' என்றாள்.

கண்ணனும் சற்று யோசித்து ''சரி உனக்கு ஒரு பட்டுப் புடவை வாங்கித் தருகிறேன். தங்க நகை மட்டும் அடுத்த வீட்டு அன்னபூரணியைக் கேட்டு அவளது தங்கச் சங்கிலியை இரண்டு நாட்களுக்கு இரவல் கேள். அதைப் போட்டுக்கொண்டு கல்யாணத்திற்கு வா. கல்யாணம் முடிந்து வந்ததும் அதை அவளிடம் திருப்பிக்கொடுத்து விடலாம்'' என்றான். அவளும் அதற்கு இணங்கினாள். அன்று மாலை கண்ணன் ஒரு பட்டுப் புடவையை வாங்கி வந்தான். உமா அடுத்து வீட்டு அன்னபூரணியிடம் இரவல் கேட்டு தங்கச் சங்கிலியை வாங்கி வந்தான். அவள் பட்டுப் புடவையைக் கட்டிக் கொண்டு தங்கச்சங்கிலியை அணிந்து கொண்டு கண்ணனுடன் கல்யாணத் திற்குக் கிளம்பினாள்.

கல்யாண வீட்டில் எல்லோருமே உமாவைப் பற்றித்தான் பேசினார்





கள். அவலது அழகைப் புகழ்ந்தார் கள். பட்டுப் புடவையும் தங்கச் சங் கிலியும் அவளது அழகை மேலும் அதிகரிக்கத்தான் செய்தது. கல்யாணம் முடிந்ததும் உமாவும் கண்ணனும் தம் நகருக்குத் திரும்பி வந்தார்கள். அப் போது உமா முன் தினம் தன் பெட்டி யில்வைத்த தங்கச் சங்கிலியை எடுத் துக் கொண்டு போய் அன்னபூரணி யிடம் கொடுக்க நினைத்தாள். அத னால் பெட்டியை அவள் திறந்து பார்த்தபோது அது அதில் காண வில்லை.

அவள் அவ்விஷயத்தைக் கண்ண னிடம் கூறவே அவனும் "கல்யாண வீட்டில் எங்காவது கழற்றி வைத்து விட்டு அதை எடுத்துக்கொள்ள மறந்து விட்டாயா?" என்று கேட்டான் அவளுக்கு அப்போது எதுவுமே சரி யாக நினைவிற்கு வரவில்லை.

கண்ணனும் "சரி சரி, உன் அஜாக் கிரதையால் நகை போய் விட்டது. ஆனால் அன்னபூரணிக்கு அதைக் கொடுக்க வேண்டுமே! என்ன செய் வது? அதற்கு ஒரே வழி அது போல புது நகை ஒன்றை வாங்கிக் கொடுத்து விடுவதுதான். அதற்கு நிறையப் பணம் வேண்டுமே. உம் இந்த வீட்டை அடமானம் வைத்தும் அலு வலகத்தில் கடன் வாங்கியும் வரு கிறேன். இன்று மாலை நகைக்கடைக் குப் போய் அதைப் போல ஒரு தங்கச் சங்கிலியை வாங்கி வந்து அன்ன பூரணியிடம் கொடுத்து விடலாம். இனிமேல் இரவலாக எதையுமே வாங்கக் கூடாது" என்றான்.

உமா இடிந்து போனாள். தன்னால் இப்படி ஒரு பெரிய செலவு ஏற்பட்டு விட்டதே என்று அவள் வருந்தினாள். அன்று மாலை நகைக்கடைக்கு அவள் கண்ணனுடன் போனாள். நல்ல வேளையாக அன்னபூரணி கொடுத்த தங்கச் சங்கிலி போல ஒன்று அங்கே இருக்கவே அதை வாங்கிக் கொண்டு இருவரும் வீட்டிற்கு வந்தார்கள் முதல் வேலையாக உமா அந்தத் தங்கச் சங்கிலியை எடுத்துக் கொண்டு போய் அன்னபூரணியிடம் கொடுத்துவிட்டு வந்தாள்.

அன்று முதல் உமாவிடம் ஒரு பெரும் மாறுதல் ஏற்பட்டது. தன் னால் ஏற்பட கடனைத் தீர்க்க வீட்டில் சிக்கனத்தைக் கடை பிடிக்கலானாள். வேலைக்காரியை நிறுத்தி விட்டு விட்டு வேலைகளைத் தானே செய்ய லானாள். தன் வீட்டின் பின்புறத்தி லும் பக்கத்திலும் காலியாக உள்ள

இடத்தில் காய்கறிச் செடிகளை வளர்த்து அவற்றை விற்றுப் பணம் சேர்க்கலானாள். தன் வீட்டுத் தென்னை மரங்களிலிருந்து தேங்காய் பறித்து அவற்றை விற்றுப் பணம் சேர்த்தாள். கண்ணனும் இந்த வேலைகளிலெல்லாம் அவ்வப்போது உமாவுக்கு உதவி வந்தான்.

இப்படியாக ஐந்து ஆண்டுகள் கழிந்தன. இப்போது உமா தன் அழகு பற்றி கர்வப்பட்டு வீண் செலவு செய்யும் உமா இல்லை. கட்டு செட்டாகக் குடித்தனம் செய்யும் அடக்க ஒடுக்கமான குடும்ப பெண்ணாக விளங்கினாள். ஒரு நாள் அவள் தான் சேர்த்து வந்த பணத்தை எல்லாம் கொண்டு வந்து கண்ணனிடம் கொடுத்து ''முதலில் இந்த வீட்டின் பேரில் வாங்கிய கடனைத் தீர்த்து வீட்டை மீட்டு வாருங்கள்'' என்றாள்.

கண்ணனும் ''பேஷ், இவ்வளவு பணம் சேர்த்து விட்டாயே. ரொம்ப சந்தோஷம். இன்னொரு விஷயம். உண்மையை உன்னிடம் சொல்லித் தான் ஆக வேண்டும். கல்யாண வீட்டில் நீ கொண்டு போன அன்னபூரணியின் நகை காணாமல் ஒன்றும் போய் விடவில்லை. நாம் அங்கிருந்து கிளம்பு முன் நீ குளிக்கப் போன போது அந்தச் சங்கிலியைக் கழற்றி வைத்தாய். அதை நான் எடுத்து கொண்டேன். அதே நகையை எனக்கு மிகவும் தெரிந்த நகைக் கடைக்காரரிடம் கொடுத்துவிட்டு அன்று மாலை அதை விலைக்கு வாங்கியது போல நடித்தேன். எனவே நகை வாங்க இந்த வீட்டை அடமானம் வைக்கவில்லை, அலுவலகத்தில் கடன் வாங்கவும் இல்லை. நீ சேர்த்த இந்தப் பணத்திற்கு நீ என்ன வேண்டுமானாலும் வாங்கிக் கொள்'' என்றாள்.

உமா முதலில் திகைத்தாலும் பிறகு ''இதனால் நான் யாரிடத்திலிருந்தும் எதையும் இரவல் வாங்கக் கூடாது என்ற பாடம் கற்றேன். என் அழகை பற்றிய கர்வமும் போயிற்று. இந்த பணத்திற்கும் செலவு இருக்கிறது. இன்னும் எட்டு மாதத்தில் நம் வீட்டில் 'குவா குவா' என்று கத்திக் கொண்டு ஒரு புதிய ஜீவன் வரப் போகிறது. அதற்கு இது பயன்படட்டும்'' என்றான்.

கண்ணனும் ''உண்மையாகவா?'' என்று கூறி மகிழ்ந்து போனான்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1997 மார்ச் மாத இதழில் வெளியிடப்படும்.



S.G. SESHAGIRI



S.G. SESHAGIRI

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஜனவரி 20-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை–600 026.**

## நவம்பர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **கண்ணான கல்வி கற்றல்.**

இரண்டாவது போட்டோ : **பண்பான கலையைப் பயில்தல்.**

பரிசு பெற்றவர் : **ஜி. ரம்யா, காரைக்குடி - 2.**

# அம்புலிமாமா

*இந்தியாவில் ஆண்டு சந்தா ரூ. 72.00*

*சந்தா அனுப்ப வேண்டிய முகவரி :*

**டால்டன் ஏஜென்சீஸ், சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை–600 026.**

Printed by B.V. REDDI at Prasad Process private Ltd., 188, N.S.K. Salai, Madras - 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras - 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

AMBULIMAMA (Tamil) January 1997 Regd. No. M. 4863